உ

குருவே துணை

வண்ணச்சரபம்

ஸ்ரீ தண்டபாணிசுவாமிகள் இயற்றியருளிய

# வருக்கக் குறள்



உரையாசிரியர்

சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள்



ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்

90-வது குருபூஜை விழா வெளியீடு

2-7-1988




பதிப்பு

தவத்திரு தி. செ. முருகதாச சுவாமிகள்

கௌமார மடாலயம்

திருவாமாத்தூர். (வழி) விழுப்புரம்.

# முன்னுரை

தமிழ்நாடு செய்த தவப்பயனுகத் திருநெல்வேலியில் முருகனருளால் 18–11–1839-ல் மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தோன்றினுர். இளமை முதலாக பலதிறக் கவிகள் பாடி அவைகளேத் தாமே பனேஓலேச் சுவடியில் எழுதியும் வைத்தனர். அருட்பணிகள் பல செய்தருளினர்.

வடலூர் வள்ளலாருடன் பலமுறை கலந்து பேசி மகிழ்ந் தனர். அருணகிரிநாதர் அம்சமாகத் தோன்றிய சுவாமிகள், சந்தத் திருப்புகழ், வண்ணப்பாக்கள் பல பாடினர். புலவர் புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம் போன்ற பல அரிய நூல்களேயும் அருளினர். இவ்வாறு இவரால் பாடப் பெற்ற பாடல்கள் ஐம்பதாயிரத்துக்கும் மேலுள்ளன.

பல திருக்கோயில் வழிபாடு செய்தபின் இறுதியில் மூவர் தேவாரத் திருப்பதிகம் பெற்ற நடுநாட்டுத் திருவாமாத்தூர் சிவதலத்தில் 10 ஆண்டுகள் எல்லே தாண்டா விரதமுடன் தங்கித் தவமியற்றி 5–7–1898-ல் திருவருட் பேறெய்தினர்.

வண்ணச்சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் அருளிச் செய்த 'வருக்கக் குறள்' என்ற இந்நூல், தமிழ்மொழியில் உள்ள உயிர்; மெய்; உயிர்மெய் என்றுள்ள அக்கரங்களே முதலீறு கொண்டு கூறுவதாய், குறட்பாவினுல் ஆக்கப் பட்டது என்பதைக் குறிப்பதாகும்.

ஆயின், மொழி முதலில் இயங்கப்பெருமல் ங, ஞ போன்றும் ட, ண, ய, ர, ல, ழ, ள, ன—வற்றின் வருக்கம் போன்றுள்ள அக்கரங்களே, உயிரெழுத்துக்களே ஏற்றபடி யமைத்துள்ளனர் ஆசிரியர். ஆகையால் மெய்யெழுத்துக்கள் எவ்வாற்ருனும் மொழி முதலில் வராது. அதற்கு 'க்' இதை

'இக்' அல்லது 'இக்கன்ஞு' என்றே கூறவேண்டும். எடுத்துக் காட்டாக 'இக்கன்ன சொல்லார்' என ஆண்டுள்ளமை காணலாம். இப்படியே பிறவும் ஆம்-நூலில் ஆங்காங்கே காணலாம். இவற்றிற்கு வலிந்து பொருள் காணவேண்டும். அதற்கான ஞாயம் விளக்கவுரையில் உரையாசிரியரான சோழவந்தான் தவத்திரு கந்தசுவாமி சுவாமிகள் கூறியுள்ளார்.

வண்ணச்சரபம் சுவாமிகளின் 90-வது குருபூஜை விழாவும், சுவாமிகள் திருநெல்வேலியிலிருந்து திருவாமாத்தூருக்கு எழுந்தருளி கௌமாரமடாலயம் நிறுவிய நூற்ருண்டு விழாவும், வண்ணச்சரபம் சுவாமிகளின் பெயரரும் ஷை மடாலயத்தலேவர், ஆயிரம் பிறைகண்ட அடிகள் தவத்திரு முருகதாச சுவாமிகள் அவர்களது 82-வது ஆண்டு தொடக்க விழாவும், 2-7-1988 அன்று நடைபெறுவதையொட்டி இந்நூல் வெளிவருகிறது.

இவ்விழாவில் இந்நூலே வெளியிட விரும்பியவர் தவத்திரு முருகதாச சுவாமிகளின் பூர்வாசிரம மூத்த குமாரர் சுவடிக்கலேஞர், புலவர் திரு தி. மு. சங்கரலிங்கம் அவர்கள். எனது இனிய நண்பர். வண்ணச்சரபம் சுவாமிகளின் நூல்களே அச்சிட விரும்பும் அன்பர்களுக்குத் தேவையான நூல்களே சுவடியிலிருந்து பிரதி செய்து கொடுத்து அரிய தமிழ்ப்பணி செய்து வந்தார். இந்நூல் அச்சாகிவரும் வேளேயில் கடந்த 10-6-88 அன்று அவர் நம்மைவிட்டு நீங்கி பரம சற்குருநாதர் திருவடி நீழலே அடைந்தார். அவரது மறைவு நமக்கெல்லாம் ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். அவரது ஆத்மா சாந்தியடைய முருகன் திருவடிகளே பிரார்த்திக்கிறேன். வண்ணச்சரபம் சுவாமிகள் அருளிச் செய்து அச்சில் வெளிவராத பல நூல்களே அச்சிட்டு உதவ தமிழ் கூறும் நல்லுலக மக்களே அன்புடன் வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

35, முருகப்பமுதலிதெரு
திருவல்லிக்கேணி.
சென்னே-600 005

முருகாசரணம்
வலேயப்பேட்டை ரா. கிருஷ்ணன்
26-5-1988



மகான், வண்ணச்சரபம்
**ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்**

உ

குருவே துணை

# வருக்கக் குறள்

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

என்றும் இறவான் இருபதம் போற்றிக்
குன்றுரு வருக்கக் குறள்பகர் வோமோ.

என்றும் — எக்காலத்தும், இறவான் - அழிவற்ற கடவுளுடைய, இருபதம் - இரண்டு (பெரிய) திருவடிகளையும், போற்றி - வணங்கி, குன்றுரு — குறைவு படாத, வருக்கக் குறள் - வருக்கக் குறள் என்னும் நூலை, பகர்வோம் - யாம் சொல்லுவோம் (என்றவாறு).

நித்திய சொரூபியாகிய முதற்கடவுளின் திருவடிகளை வணங்கி, வருக்கக் குறள் என்னும் நூலைச் சொல்லத் தொடங்கினோம் என்பதாம்.

### நூல்

### உயிர் வருக்கம்

### அ

அருள்வழியிற் சோர்வடையா ஆர்வமுளார் எல்லாம்
இருள்வழியிற் சேர்வார்க் கிகல்

அருள்வழியில் — சீவகாருணியமாகிய நன்மார்க்கத்தில், சோர்வு அடையா - நடப்பதற்குத் தளராத, ஆர்வம் உளார் எல்லாம் - அன்புடையார் யாவரும், இருள்வழியில் - மற்றை ஆணவ மல சம்பந்தமாகிய கொடிய மார்க்கத்தில், செல்வார்க்கு - நடப்பவர்களுக்கு, இகல் - பகைவராவர்.

சீவகாருணியத்தில் பூர்ணநோக்கமுடையவர்கள் ஏனை யோர்களுக்குப் பகைவராவார்கள் என்பதாம். 1

## ஆ

ஆறு சமயத் தவர்உரைக்கும் தெய்வமுற்றும்
வேறிவே றல்லஎன்கை மெய்

ஆறுசமயத்தவர் - அறுவகைச் சமயத்தோரும், உரைக்கும் - தனித்தனியே அபிமானத்தாற்கூறும், தெய்வமுற்றும்- தெய்வங்கள் எல்லாம், வேறு வேறல்ல என்கை - வெவ் வேறன்று என்று மெய்யறிவுடையோர் கூறுதல், மெய்- உண்மையோகும் என்பதாம்.

ஒரு தெய்வமே பல தெய்வங்களாக விளங்குகிறது என்பதாம். 2

## இ

இச்சித்த பேறனைத்தும் ஈயும் திருவருளை
நச்சிக்கொள் வாரே நரர்.

இச்சித்த - தொண்டர்களால் விரும்பப்பட்ட, பேறு அனைத்தும் - எல்லாப் பயன்களையும், ஈயும் -கொடுக்கவல்ல, திருவருளை - இறைவன் கிருபையை, நச்சி - பேரன்புடன் வழிபட்டு, கொள்வாரே - வேண்டியவைகளைப் பெறத் தக்கவரே, நரர் - மானிட வடிவத்தைப் பெற்றவராவர் என்பதாம்.

இறைவன் கருணையைப் பெறுபவர்களே மேன்மக்களா வர் என்பதாம். 3

## ஈ

ஈகைத் தொழிலே இனிதென் றுணராதார்
ஓகைக் கிடையூ றும்.

ஈகைத் தொழிலே - உத்தமர்களுக்குக் கொடுக்கும் கொடைத் தொழில், இனிதுஎன்று - இனிமையுடைய

தென்று, உணராதார் - அறிந்து கொடாதவர்களது, ஓகைக்கு - மனக்களிப்புக்கு, இடையூறு - துன்பங்கள், உறும்- வரும்.

உத்தமர்களுக்குக் கொடாதவருடைய மனமகிழ்ச்சி அழியும் என்பதாம். **4**

## உ

உலகிற் குதவும் உணர்வுடையார் தாமே
இலகுண்மை ஞானத் தினர்.

உலகிற்கு - உலகத்திற்கு, உதவும் - செய்யத்தகும் உபகாரங்களைச் செய்தற்கு ஏதுவாகிய, உணர்வு – நல் லறிவை, உடையார்தாமே - உடையவர்களே, இலகு – பிர காசிக்கின்ற, உண்மை ஞானத்தினர் - மெய்யறிவு உடையவர்கள்.

உலகோபகாரிகளே மெய்ஞ் ஞானிகள் என்பதாம். **5**

## ஊ

ஊனருந்தல் தீதென்(று) உறுத்தாதார் உற்றஉண்மை
ஞானமுற்றும் தேரில் நகை.

ஊன் - புலாலை, அருந்தல் - புசித்தல், தீதுஎன்று - கொடியபாவம் என்று, உறுத்தாதார் - அனைவருக்கும் தெரிவிக்காதவர்கள், உற்ற - அடைந்த, உண்மை ஞானம்- மெய்ஞ்ஞானமானது, முற்றும் தேரில் - நன்கு ஆராயின், நகை - நிந்தையாக முடியும்.

புலால் உண்ணுதலால் உண்டாகும் கொடுமையை உலகத்து நன்கு அறிவித்து நீக்கமாட்டாதவர்களுடைய ஞானம் பழியை உண்டாக்கும் என்பதாம். **6**

## எ

எள்ளிடத்தில் எண்ணெயென எங்கும் நிறைந்தானை
நள்ளுநெறி ஒன்றே நலம்.

எள்ளிடத்தில் - எள்ளினிடத்து, எண்ணெய்என - தைலம் நிறைந்திருப்பது போல, எங்கும் - எவ்விடத்தும், நிறைந்தானை - நிறைந்திருக்கும் மெய்க்கடவுளை, நள்ளும் - உண்மை அன்போடு வழிபடும், நெறி - வழிஎதுவோ, ஒன்றே - அஃதொன்றுமே, நலம் - நன்மையதாகும்.

எம்முடைய கடவுள் எங்கும் நிறைந்தவர் என்று கூறும் சமயமே நல்ல சமயமாகும் என்பதாம். 7

## ஏ

**ஏசினர்க்கும் பேறருள்வான் ஈசனெனத் தேறுமவர்**
**பேசிடும்சொற் கில்லை பிழை.**

ஈசன் - எல்லாவல்ல இறைவன், ஏசினர்க்கும் - தன்னை உரிமையில் நிந்தித்தவர்களுக்கும், பேறு – நற்பயனை, அருள் வான் என - கொடுப்பான் என்று, தேறுமவர் - தெளிந்த வர்கள், பேசிடும் - சொல்லுகின்ற, சொற்கு - வார்த்தைக்கு பிழைஇல்லை - குற்றம் இல்லை.

கடவுள், உரிமையினால் இகழ்ந்தோர்க்கும் அருள் செய் வார் என்று சொல்லுபவர் வார்த்தையில் பழுதில்லை என்பதாம். 8

## ஐ

**ஐந்து பொறியும் அடங்கும் குறியினின்றால்**
**வந்து திகழ்வான் வான்.**

ஐந்து பொறியும் - பஞ்சேந்திரியங்களும், அடங்கும் - ஒடுங்குதற்கு ஏதுவாகிய, குறியில் - ஓர் இலட்சியத்தில் நின்றால் - ஒருவனது மனம் அசைவற நிற்குமாயின், வான் - ஈசுவரன், வந்து - எளிதில் தோன்றி, திகழ்வான் – காட்சி யளிப்பான்.

ஐந்து இந்திரியங்களும் அடங்க, இறைவன் வடிவை இடைவிடாமல் தியானிப்பவர்களுக்கே கடவுட் காட்சி உண்டாகும் என்பதாம். 9

## ஒ

**ஒன்றன்றி மற்றும் ஒருதெய்வம் ஓதிடினும்
கன்றன்ன சிற்றறிஞர் காண்**

ஒன்றன்றி – தாம் வழிபடும் ஒரு தெய்வத்தையன் றி, மற்றும் - அதற்கு வேருகவும், ஒரு தெய்வம் – வேறு ஒரு தெய்வம் உண்டென்று, ஓதிடினும் - சொன்ஞராயினும் அவர், கன்று அன்ன – சிறுவரைப் போன்ற, சிற்றறிஞர் காண் – அற்ப அறிவினர் என்றுணர்க.

தெய்வம் ஒன்று என்றிருப்பதுவே பேரறிவாகும் என்பதாம். **10**

## ஓ

**ஓங்காரத் துண்மை உணரார் உரைமுழுதும்
பாங்காம்என் றெண்ணப் படா.**

ஓங்காரத்து - பிரணவத்தின், உண்மை - உண்மைப் பொருளே, உணரார் - கேட்டுச் சிந்தித்துத் தெளியாத வருடைய. உரைமுழுதும் - உபதேசம் முழுமையும், பாங்கு ஆம் என்று - நன்மை பயப்பவை என்று, எண்ணப்படா - மதிக்கப்படமாட்டாது.

பிரணவத்தின் பொருளே நன்கு தெளியாத ஆசிரியருடைய உபதேசம் நன்மையைத் தராது என்பதாம். **11**

## ஔ

**ஔவையோடு வள்ளுவனும் ஆராய்ந் துரைத்த நெறி
செவ்வையெனத் தேர்ந்தோர் சிலர்.**

ஔவையொடு வள்ளுவனும் - ஔவையாரும், திருவள்ளுவரும், ஆராய்ந்து - நன்மை தீமைகளே உணர்ந்து, உரைத்த நெறி, கூறிய நன்னெறிகளே, செவ்வையென - பெரும்பயன் அளிக்கும் என்று, தேர்ந்தோர் - தெளிந்துள்ள நல்லோர், சிலர் - உலகத்தில் சிலரே ஆவர்.

ஔவை வள்ளுவர் கூறிய நல்லொழுக்கங்களைத் தழுவி நடப்பவர் உலகத்திற் சிலர் என்பதாம். 12

ஃ

அஃறிணையே போலும் அவரே அகிலமிசை
வெஃகியுறை கின்றார் மிக.

அஃறிணையே மிருகங்களையே, போலும் அவரே - ஒத்ததன்மை உடையவரே, அகிலமிசை - இவ்வுலகின்கண், வெஃகி - உண்ணல், உறங்கல்களையே விரும்பி, மிக - பெரும்பாலும், உறைகின்றார் - வாழ்கின்றார்கள்.

மிருகங்களுக்கு ஒப்பான குணமுடையவர்களே உலகத்தில் அதிகரித்திருக்கின்றார்கள் என்பதாம். 13

## மெய்வருக்கம்

க்

இக்கன்ன சொல்லார் இனத்தும் புருடரினும்
மிக்கவர்உண் டென்றுரைக்கை மெய்

இக்கு அன்ன - கரும்பு போன்ற இனிய, சொல்லார் - சொல்லையுடைய, இனத்தும் - பெண்கள் கூட்டத்துள்ளும், புருடரிநும் - ஆடவரினும், மிக்கவர் - சிறந்தவர் - உண்டென்று - சிலர் உண்டென்று, உரைக்கை - சொல்லுதல், மெய் - உண்மையாம்.

ஆண்மக்களினும் சிறந்துற்ற சில பெண் மக்கள் இவ்வுலகின் கண் உளர் என்பதாம். 14

ங்

இங்கும்பரன் உளன் என்றேத்துதலை விட்டு விண்ணில்
தங்குநனே என்னோர் தவர்.

பரன் - மேலான கடவுள் எங்கும் உள்ளவனுதலால், இங்கும் - இப்பூலோகத்திலும், உளன் என்று - உள்ளவன்றான்

என்று தெளிந்து, ஏத்துதலை - துதிக்கும் தொழிலை, விட்டு - நீங்கி, விண்ணில் - பரலோகத்தில் மாத்திரம், தங்குநன் - உள்ளவன், என்னுர் - என்று சொல்லார், தவர் - மெய்த் தவமுடையோர்.

கடவுள் எங்கும் நிறைந்தவன் எனத் தெளிந்துள்ள வர்களே உண்மைத் தவசி என்பதாம். 15

ச்

இச்சை தவத்திற் இகம்என்பார் ஏற்றமுறின்
மெச்சும் உறவாய் விடும்

இச்சை – ஆசையானது, தவத்திற்கு - தவத்தினுக்கு இகல் என்பார் - பகையாகும் என்று சிலர் கூறுவர். ஏற்றம் உறின் - அவ்வாசையானது அளவிறந்துள்ள தாயின், மெச்சும் - யாவரும் கொண்டாடத்தக்க, உறவாய் விடும் - அத்தவத்தின் துணையாய் முடியும்.

நிராசையேயன்றிப் பேராசையும், தவத்திற்குத் துணை யாகிப் பெருஞ்சுகத்தை விளைக்கும் என்பதாம். 16

ஞ்

இஞ்ஞானம் அஞ்ஞானம் என்றுரைப்பார் ஈசனருள்
எஞ்ஞானத் திற்கும் இறை

இஞானம் - இந்தஞானம் பெரிது, அஞானம் - அந்த ஞானம் பெரிது, என்று உரைப்பார்- என்று சிலர் கூறுவார், ஈசன் அருள் - ஈசுவர அனுக்கிரகத்தால் உண்டாகும் ஞானமே, எஞானத்திற்கும் – எவ்வகைப்பட்ட ஞானங் கட்கும், இறை - தென்மையான பதிஞானமாம்.

பாச ஞானம், பசுஞானங்களைக் கடந்தபதி ஞானமே மெஞ்ஞானம் என்பதாகும். 17

## ட்

**இட்ட படிவ ருமென் றேமாந்து நாட்கழிக்கப்
பட்டவர்க ளெல்லாம் பதர்.**

இட்டபடி - கருவில் அமைத்தபடியே, வரும் என்று - எல்லாப்பயன்களும் கிடைக்கும் என்று, ஏமாந்து - இறுமாப் படைந்து, நாள் - வாழ்நாட்களை, கழிக்கப்பட்டவர்கள் எல்லாம் – வீணாகப் போக்குவோர் யாவரும், பதர் - பயன் படாத பதருக்கு ஒப்பாவார்.

நன் முயற்சியை வெறுத்து எல்லாப் பயனும் அமைந்தபடி வரும் என்று இறுமாப்படையும் அறிவிலிகள் பயனற்றவர்கள் ஒன்பதாம். **18**

## ண்

**இண்ணுறுப்பிற் றோய்சுழிபோல் ஈசன்முதல் மூவரையும்
நண்ண வல்லார்க் கில்லை நவை.**

இண் உறுப்பில் - ணகர ஒற்றிடனித்து, தோய் – அமைந்துள்ள, சுழிபோல் - மூன்று சுழிகளைப் போல், ஈசன் முதல் - சிவன் முதலிய, மூவரையும் - மும்மூர்த்திகளையும் நண்ணவல்லார்க்கு - இறைவனிடத்து அமைந்துள்ள முக் குணங்கள் எனத் தெளிந்து கொள்ள வல்லாருக்கு, நவை - மயக்கம் என்னும் குற்றம், இல்லை - அழிந்துபோம்.

ணகரத்தின் மூன்று சுழிகளைப்போல் மெய் கடவுளின் முக்குணங்களே மும்மூர்த்திகள் எனத்தெளிய வல்லோருக்கு விபரீத ஞானம் கெடும் என்பதாம். **19**

## த்

**இத்தரையிற் பேறொன்றும் எய்தாது வீடுபெற்ற
முத்தரும்உண் டென்கை முரண்.**

பேறு ஒன்றும் - அருட்பேற்றால் உண்டாகும் அற்புதங் களுள் ஒன்றும், எய்தாது - அடையாதிருந்து, வீடு பெற்ற –

முத்தியடைந்த, பித்தரும் - முத்தான்மாக்களும், இத்தரையில் – இப்பூமியின் கண், உண்டு என்கை - உளர் என்று சிலர் கூறுதல், முரண் - விரோதமாம்.

அருட்சித்தி பெறுதவர்களை மெய்ஞானிகள் என்பதும், மோட்சம் அடைந்தவர்கள் என்பதும் குற்றமாகும் என்பதாம். **20**

**ந்**

**இந்நகரே நன்னகராம் என்னும்நூல் யாவுமெண் ணில்**
**எந்நகரம் நன்னகரா மே.**

நூல் - தவப்பெருமை கூறும் ஓர் நூலானது, இந்நகரே - இந்தத்தலமே, நல்நகராம் எல்லாப் பயன்களையும் தரவல்ல தலம், என்னும் - என்று ஒன்றொன்றையே சிறப்பித்துக் கூறும், யாவும் - அவ்விதமே கூறும் எல்லா நூல்களையும் எண்ணில் - நன்கு ஆராயின், எந்நகரும் - எல்லாத்தலங்களும், நல்நகர் ஆம் - பயன் தரும் புண்ணியத் தலங்களே யாம்.

பூமியிலுள்ள புண்ணியத் தலங்கள் எல்லாம் பெரும் பயன் தரத்தக்கவைகளே. ஆகையால் ஐயம் திரிபு இன்றிப் பத்தியோடு வழிபடுதல் வேண்டும் என்பதாம். **21**

**ப்**

**இப்பார் மகள்விருப்பம் ஈடிலருட் பேறடைந்தோர்**
**மெய்ப்பாதத் துண்டே மிக.**

ஈடுஇல் - சமானம் இல்லாத, அருட்பேறு - திருஅருட் பேற்றை, அடைந்தோர் - பெற்ற மெய்ஞ்ஞானிகளுடைய மெய்பாதத்து - உண்மையான திருவடிகளிடத்து, இப்பார் மகள் - இந்தப்பூமி தேவிக்கு, மிக - பெரும்பாலும் விருப்பம் - அவாவானது, உண்டே - உண்டாகியே இருக்கும்.

பூமிதேவி பெரியோர்களுடைய திருவடிகளைச் சுமப்பதிலேயே சதா விருப்பம் உடையவளாய் இருப்பாள் என்பதாம். 22

ம்

இம்மையினில் உம்மை இயல்பறிய மாட்டாதார்க்கு
அம்மையற்ற வாறு பொய்மை யாம்.

இம்மையினில் - இப்பிறப்பின்கண், உம்மை இயல்பு - முற்பிறப்பின் தன்மையை, அறிய - தெரிந்துகொள்ள, மாட்டாதார்க்கு - முடியாதார்க்கு, அம்மை - வரு பிறப்பு - அற்றவாறு - நீங்கிய தென்பது, பொய்மை ஆம் - உண்மையல்லவாம்,

முற்பிறப்பின் தன்மையைத் தெரிந்துகொள்ளாதவருக்கு வரு பிறப்பு அறுது என்பதாம். 23

ய்

இய்யரையா மாறே இரவும் பகலானுல்
வைய்முற்றும் போற்றல் வரும்.

இ - இகர உயிரெழுத்தானது, அரைஆம் மாறே - அரை என்னும் கணக்கெழுத்து ஆனது போலவே, இரவும் - இராக்காலமும், பகல்ஆனுல் - பகற்காலமாய்ப் பிரகாசிக்கும் ஞானம் ஒருவருக்கு வருமாயின், வையமுற்றும் – உலக முழுவதும், போற்றல் – வணங்குமகிமையும், வரும் - அவருக்கு உண்டாகும்.

இரவையும், பகலாக்க வல்லதாகிய ஞானம் அடைந்தவரை உலகமெல்லாம் வணங்கும் என்பதாம். 24

ர்

இர்எனல்முன் தவ்விடலூ டேய்ந்தமத்தும் போலுழக்கும்
கர்வமற்ருற் ரேன்றும் கதி.

இர்எனல்முன் - இர்என்பதன் முன், தஇடல் – தகரக் குறிலேயும் கூட்டிக் கூறப்படும் பதார்த்தமாகிய தயிரின்,

ஊடு – மத்தியில், ஏய்ந்த - பொருந்திய, மத்துப்போல் - மத்தைப்போன்று, உழக்கும் – அறிவைக் கலக்குகின்ற, கர்வம் - அகங்காரமானது, அற்ருல் - கெடுமாயின், கதி - மோட்சத்தின் தன்மை, தோன்றும் - ஒருவனுக்கு விளங்கும்.

அகங்காரநாசம் உடையோர்க்கே முத்தி இன்பம் தோன்றும் என்பதாம். 25

## ல்

இல்லும் துறவும் இனிதே இலங்கருட்சீர்
ஒல்லும் தவமுடையோர்க் கு.

இலங்கு - விளக்கமான, அருட்சீர் - திருவருட்செல்வமானது, ஒல்லும் - பொருந்தத்தக்க, தவம்உடையோர்க்கு தவம்வாய்ந்துள்ளோர்க்கு, இல்லும் – இல்லறமும், துறவும்– துறவறமும், இனிது - நன்மையாகும்.

ஒருவருக்குத் திருவருட் செல்வமாத்திரம் வாய்ப்பதாயின் அவருக்கு இருவகை அறங்களும் ஒரு தன்மைத்தாகும் என்பதாம். 26

## வ்

இவ்வகிலம் நிற்குநிலை யீதென் றுணராதார்
செவ்வருட்பே றெய்தார் திறம்.

இவ்வகிலம் – இந்தஉலகம், நிற்கும்நிலை – நிற்கத் தகும் முறைமை, ஈது என்று – இன்னது என்று, உணராதார் - ஆராய்ந்து அறியாதவர், செவ்அருட்பேறு - செவ்விய அருட்பேற்றை, எய்தார் - அடையார் என்பது, திறம் - உறுதியாம்.

உலக இலக்கணத்தை அறியாதவர்க்கு அருள் இலக்கணம் உள்ளபடி விளங்காது என்பதாம். 27

## ழ்

இழ்காத நெஞ்சத் திருந்தவத்தோர்க் கெய்துமே
ஒல்காது வெல்லும் உரம்.

இழ்காத - நிலைதவருத, நெஞ்சத்து - திட சித்தம் உடைய, இரும் தவத்தோர்க்கு - பெருந்தவம் உடை

யோர்க்கு, ஒல்காது- தளராமல், வெல்லும் - பகைவர்களை அடக்கும், உரம் – வலிமையானது, எய்தும் - உண்டாகும்.

திடசித்தம் உடைய மெய்த்தவம் உடையவர்க்கே சாப அநுக்கிரக சாமர்த்தியம் உண்டாகும் என்பதாம். **28**

**ள்**

**இள்ளதற்கு முற்ககரம் இட்டதன்ன இன்சொல்லார்த்**
**தள்ளலரி தாய தவம்.**

இள்அதற்கு - ளகர ஒற்றிற்கு, முன் - முன்னே, ககரம் - ககரக் குறிலையும், இட்டதன்ன - கூட்டிக் கூறப்படும் கள் என்னும் தேனை ஒத்த, இன் சொல்லார் - இனித்த சொல்லை யுடைய பெண்ணாசையை, தள்ளல் - நீக்கிச் செய்தலே, அறிதாய தவம் – அருமையாகிய தவமாம்,

பெண்ணாசை இல்லாத்தவமே பெருந்தவம் என்பதாம். **29**

**ற்**

**இற்ற வினையோர் இதயத்திற் றோன்றுமே**
**மற்றையவர் காணு மலம்.**

இற்ற - மிகக்குறைந்த, வினையோர் - பூர்வகர்மம் உடையவரது, இதயத்தில் - உள்ளத்தில், மற்றையவர் - அக்கரும மிகுதியை உடையவரால், காணு - காணக்கூடாத' மலம் - மும்மலக்குற்றங்கள், தோன்றும் - விளங்கும்.

இச்சையின்றிச் செய்த சிவ புண்ணியங்களால் முன்வினை மிகவும் நசிந்தவர்களுக்கு மும்மலத்தின் குற்றம் தோன்றும் என்பதாம். **30**

**ன்**

**இன்னல் பணிவார்க் கிலாதொழிக்க மாட்டாதார்**
**என்னபயன் எய்தினும் வீணே !**

பணிவார்க்கு - தம்மை முறைப்படி வழிபட்டவர்கட்கு, இன்னல் - துன்பமானது, இலாது - அற்பமும் இல்லாமல்,

ஒழிக்க மாட்டாதார் - நீக்கமனமில்லாதார், என்னபயன் எய்தினும் - எவ்வகைச்சிறப்பு அடைந்து இருப்பினும், வீணே - அது வீணேயாகும்

அடுத்தவர்களைக் காப்பாற்றாதவர்கள் பயனடையார் என்பதாம். 31

"உயிர்மெய் - ககரவருக்கம்"

க

கண்ணுடையார் தம்மிற் கடவுளுருக் காண்பரிதென்(று)
எண்ணுநர்கண் ணில்லார்க ளே !

கண்ணுடையார் தம்மில் - கண்களை உடையவர்களுக்குள். கடவுள் - ஈசுவரனது, உரு - சகளவடிவை, காண்பு - தெரிசித்தல், அரிதுஎன்று - முடியாதென்று, எண்ணுநர் - நினைக்கின்றவர்கள், கண் இல்லார்களே - கண்கள் இல்லாதவர்களே யாவர்.

இறைவனது திருவுருவத்தைத் தெரிசிக்க முடியாது என்பவர்கள் குருடர்களே யாவர் என்பதாம். 32

கா

காராழி சூழுலகைக் காக்கின்ற காவலரிற்
சீராமன் போல்வார் சிலர்.

கார் ஆழி - கரிய கடலால், சூழ் - சூழப்பட்ட உலகை, உலகத்தை, காக்கின்ற - காவல் செய்கின்ற, காவலரில் - அரசர்களுள், சீராமன் போல்வார் - சீராமனைப்போன்ற செங்கோல் அரசர்கள், சிலர் - சிலரேயாவர்,

சீராமனை யொத்த நீதி மன்னர் இப்பூமியிற் சிலரே யாவர் என்பதாம். 33

## கி

**கிஞ்சுகவாய்க் கிள்ளைக் கிழவோன் மலர்க்கணைக்குள்**
**அஞ்சுகிலார் கண்ணனனை யார்.**

கிஞ்சுகவாய் - முருக்கம்பூவை யொத்த சிவந்த வாயை யுடைய, கிள்ளை - கிளிவாகனத்திற்கு உரிய, கிழவோன் - மன்மதன் செலுத்துகிற, மலர்க்கணைக்கு — புட்ப பாணங் களுக்கு, உள்அஞ்சுகிலார் — மனோபயம் அடையார்— கண்ணன் அனையார் - கிருஷ்ணனை ஒத்ததிடஞானிகள்

கிருட்டினனை ஒத்த திடஞானிகள் மன்மதனது போருக்கு அஞ்சார் என்பதாம். **34**

## கீ

**கீழ்மக்க ளார்வம் கெடுமாறு செய்யாது**
**வாழ்மக்கள் ஞான மயல்.**

கீழ்மக்கள் - கீழோர்களுடைய, ஆர்வம் — மகிழ்ச்சி யானது - கெடுமாறு — அழியுமாறு, செய்யாது — அதற்கு ஏற்பவைகளைச் செய்யாமல், வாழ்மக்கள் - வாழ்கின்ற சீவன்முத்தர்களது, ஞானம் - ஞானமானது, மயல் — அஞ்ஞானமாகும்.

மனம் போன வழியிற் செல்லும் துட்டர்களை அடக்சி யாளாத சீவன் முத்தர்களது ஞானம் அஞ்ஞானமாம் என்பதாம். **35**

## கு

**குற்றஞ் செயினும் குணமாக்கிக் கொள்குரவன்**
**பற்றவல்லாற் கில்லை பயம்.**

குற்றம் - குற்றங்களை, செயினும் - செய்தாலும், குணம் ஆக்கி - அவற்றைக் குணங்களாக்கி, கொள் — ஆட்கொள் ளும் பெருங் கருணையையுடைய, இரவன் - ஆசாரியனை,

பற்றவல்லாற்கு - பேரன்போடு வழிபட வல்ல மாணுக்கனுக்கு, பயம் – யாதொரு பயமும். இல்லை - உண்டாகாது.

அருள் வடிவமாகிய ஆசாரியனை அடுத்த சீடனுக்குப் பயம் இல்லை என்பதாம். 36

கூ

கூறுஞ் சுருதிக் குழாமுழுதும் கொள்ளுநலம்
தேறுமவர் பாரிற் சிலர்.

கூறும் – பூர்வ பட்சமாகவும், சித்தாந்தமாகவும் எல்லாவற்றையும் விதிக்கின்ற, சுருதிக்குழாம் - வேத ஆகமங்கள், முழுவதும் - எல்லாமும், கொள்ளும் - தம்முள் கொண்டிருக்கும், நலம் - நன்மையாகிய உண்மை நூற்களை, தேறும் அவர் - தெளியவல்லார், பாரில் – இம்மண்ணுலகத்தில், சிலர் - சிலரேயாவார்.

எல்லாவற்றையும் கூறும் வேதாகமங்களில் உள்ள பூர்வ பட்சங்களை நீக்கி, சித்தாந்தங்களையே கைப்பற்ற வல்லார் இவ்வுலகத்தில் சிறந்தவர் என்பதாம். 37

கெ

கெஞ்சி யிரப்போரிற் கீழோர் கடன்மிகக்கொண்(டு)
அஞ்சியொல்கும் பான்மை யவர்.

கடன்மிகக் கொண்டு - வட்டியில் தொகை மிகும்படி கடனைக் கொண்டு, அஞ்சி - கடன் கொடுத்தவர்களைக் காணுந்தோறும், நினைக்கும் தோறும் பயமடைந்து, ஒல்கும்- மற்றவர்களைக் காணவும், அவரோடு பேசவும் வெட்கமடையும், பான்மையவர் - தன்மையை உடையோர், கெஞ்சி - பல்லைக் காட்டிக் கெஞ்சி, இரப்போரில் - யாசிப்போரைக் காட்டிலும், கீழோர் — இழிந்தோராவார்.

கடன் கொண்டோர், யாசிப்போரினும் கடையர் என்பதாம். 38

## கே

**கேள்விப் பெரும்பயனே கேடற்ற தென்றுணர்வார்**
**ஆள்வித்தைக் குண்டாம் அணி.**

கேள்வி - கேள்வியால் உண்டாகும், பெரும் பயனே - பெரும் பிரயோசனமே, கேடுஅற்றது என்று - அழிவு இல்லாது என்று, உணர்வார் - அறியவல்லவரால், ஆள் - பயிலப்படும், வித்தைக்கு - கல்விக்கு, அணி - அழகு, உண்டாம் - உண்டாகும்.

கேள்வியில் முயன்றவர்கள் கல்வியே அழகுடையது என்பதாம். **39**

## கை

**கைக்குஞ் சரமனைய காவலர்தங் கோமானும்**
**மிக்குணர்ந்தோர்க் கஞ்சல் விதி.**

கை - துதிக்கையையுடைய, குஞ்சரம் - யானையை, அனைய - ஒத்த, காவலர்தம் - பல சிற்றரசர்களுடைய, கோமானும் - தலைவனாகிய பேரரசனும், மிக்கு உணர்ந்தோர்க்கு - அறிவில் முதிர்ந்தவர்களுக்கு, அஞ்சல் - அஞ்சி நடத்தல், விதி - நியமமாம்.

அறிவில் மிகுந்த மேலோருக்கு அஞ்சி நடத்தல் அரசனுக்கு நல்லொழுக்கம் என்பதாம். **40**

## கொ

**கொல்லும் தொழிற்போல் கொடும்பாவ மில்லையெனச்**
**சொல்லும்சொல் பன்னூற் றுணிவு.**

கொல்லும் - உயிரைக் கொலை செய்கின்ற, தொழிற்போல் - தொழிலைப்போல, கொடும்பாவம் - கொடிய பாவத்தை விளைப்பது, இல்லைஎன - வேறொன்றும் இல்லை என, சொல்லும் சொல் - நல்லோர் கூறும் வார்த்தை, பன்னூல் பல நூல்களிலும் உள்ள, துணிவு - நிச்சயமாம்,

உயிர்க்கொலையே எல்லாப் பாவங்களிலும் கொடியது என்பது பலநூல்களின் முடிவு என்பதாம். 41

## கோ

கோவிற் கடவுள் குருபரனைக் காட்டுமென்றல்
பாவிற் பொறித்தார் பலர் !

கோவிற் கடவுள் - ஆலயத்தின்கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுள், குருபரனை - மேலாகிய குருமூர்த்தியை, காட்டும் - தன்னை வழிபட்ட தொண்டனுக்குத் தரிசிப்பிக்கும், என்றல் – என்பதை, பலர் – நல்லோர் பலரும், பாவில் - நூல்களில், பொறித்தார் - எழுதிஅறிவித்தார்கள்

ஆலயத்தின் கண் உள்ள கடவுளை விதிப்படி வழிபடுகிற வருக்கு சற்குரு தரிசனம் உண்டாகும் என்பதாம். 42

## கௌ

கௌவைக் கடல் சுவற்றும் காரணத்தை ஆய்ந்தறிவான்.
மெய்வைத்த வாய்ப்பொருளே மேல்.

கௌவை – துன்பம் என்னும், கடல் - சமுத்திரத்தை, சுவற்றும் - வற்றச்செய்யும், காரணத்தை - ஏதுவாகிய உபாயத்தை, ஆய்ந்து - நன்கு ஆராய்ந்து, அறிவான் - உணர்ந்தவனது, மெய்வைத்த - சத்தியம் நிறைந்த, வாய்ப் பொருளே – வாய்ச் சொல்லே, மேல் - உயர்ச்சி உடையதாம்.

துயரங்களைப் போக்குதற்கு ஏதுவாகிய உபாயங்களை எல்லாம் தெரிந்த சத்தியவானது வாய்ச்சொல் உயர்வுடையதாகும் என்பதாம். 43

### ''ஙகர வருக்கம்''

## ங

ஙகர மென இனத்தை நன்கு தழுவும்
மகனெடுமா லென்ன மகிழ் வான்

*3128—2*

ஙகரம் என - ஙகரத்தைப் போல், இனத்தை – தன் இனத்தை,நன்கு - நன்றாக, தழுவும் – பேணுகின்ற, மகன் – புருடனானவன், நெடுமால் என்ன - மகா விட்டுணுவைப் போல், மகிழ்வான் - மகிழ்ச்சியை அடைவான்.

இருத்தல், கிடத்தல், நடத்தல், முதலியதொழில்களைச் செய்யுமிடத்தும், சகல உயிர்களையும் குறிக்கொண்டு பேணும் அறிஞர்கள் விட்டுணுவைப்போலப் பெருவாழ் வடைவார்கள் என்பதாம். 44

ஙா

**நாவிற் பயனில்லான் நற்றாயர் தந்தையின (து)**
**ஆவிக் குதவா தவன்.**

நல் - நற்குணமுடைய,தாயார் தந்தையானது - மாதா பிதாக்களுடைய, ஆவிக்கு - உயிர்களுக்கு, உதவாதவன் – உபகரியாதவன், ஙாவில் - ஙா என்றும் எழுத்தைப் போல் பயன் இல்லாத பிரயோசனம் அற்றவன் ஆவான்.

தாய் தந்தையர்களை உபசரியாதவன் நற்கதியடைய மாட்டான் என்பதாம். 45

**ஙிகர மதுபோல்வான் நீதிமன்னன் வண்மைப்**
**புகழ்மறைக்கும் மாற்றம் விரும் பும் !**

ஙிகரம் அது — ஙி என்னும் எழுத்தை, போல்வான் — ஒத்தவன், நீதிமன்னர் — நடுநிலைமையையுடைய அரசரது, வண்மை — வளப்பத்தையுடைய, புகழ் — கீர்த்தியை, மறைக்கும் — ஒளித்துச் சொல்லும், மாற்றம் — தப்புவார்த்தையை, விரும்பும் — விரும்புவான்,

அதோமுக விருத்தி உடையவன் கொடுங்கோல் அரசை மிகவும் புகழ்ந்து, செங்கோல் அரசாங்கத்தின் பெரும்புகழை மறைப்பான் என்பதாம்.

### ஙீ

**ஙீகார மன்னுன் நிலத்தி லொரு வருண்ணும்**
**ஆகார மீந்துமறி யான்.**

நிலத்தில் - இப்பூமியின் கண் ஒருவர் - ஒருவருக்கு, உண்ணும் - அவரால் உண்ணப்படும் அளவினதாகிய, ஆகாரமும் - உணவையும், ஈந்து அறியான் - கொடுத்தறியாதவன், ஙீகாரம் என்னும் எழுத்தை, அன்னுன் ஒத்தவனுவான்.

ஒருவர் உண்ணும் அளவினதாகிய உணவையும் கொடாதவன் முழு லோபியாவான் என்பதாம். **47**

### ஙு

**ஙுவ்வனையார் தம்மை நுவலின் நுடங்குமின்னற்**
**பௌவ மதிற்ருழ் பவர் !**

ஙுஅனையார் தம்மை - ஙு என்னும் எழுத்தை போன்றவரது இயல்பை, நுவலின் - சொல்லப் புகின், நுடங்கும் - துவட்சியை உண்டாக்குகிற, இன்னல் - துக்கம் என்னும் பௌவமதில் - சமுத்திரத்தில், தாழ்பவர் - வீழ்வோர் ஆவார்.

இரண்டுபட்ட கருத்துடையவர் பெருந்துக்கத்தில் ஆழ்வார் என்பதாம். **48**

### ஙூ

**ஙூகார மேயனையார் நோன்போன்றும் நோற்றறியாத்**
**தேகாபி மானத் தினர்**

நோன்பு - விரதங்களுள், ஒன்றும் — யாதொன்றையும், நோற்று அறியா —முறைப்படி மேற்கொள்ளாத, தேக அபிமானத்தினர் - தேக ஆத்மபுத்தியை உடையவர், ஙூகாரமே, ஙூஎன்னும் எழுத்தையே, அணையார் - ஒத்தவராவர்.

ஒரு விரதத்தையும் சாதியாதவருக்கு அந்தக்கரணம் பரிசுத்தம் அடையாதென்பதாம். **49**

## ஙெ

**ஙெகர மதுகடுப்போர் நீடுறுதன் னூரும்**
**பகர விளங்காத பலர்.**

நீடுறு - விசாலமாகிய, தன்ஊரும் - தத்தம் ஊரில் உள்ளவரும், பகர – புகழும்படி, விளங்காத - விளங்க மாட்டாத, பலர் - பலரும், ஙெகரம் அது - ஙெ என்னும் எழுத்தை, கடுப்போர் – ஒத்தவராவார்.

சிறிது புகழும் இல்லாதவர் இழிந்தோரேயாவர் என்பதாம். **50**

## ஙே

**ஙேகாரம் போல்வார் நிறையுமறை யுள்வல்லார்க்(கு)**
**ஆகா தனவிழைகின்றார்.**

நிறையும் - சகலபொருள்களும் நிறைந்துள்ள, மறையுள் – இரகசியத்தலமை உடைய வேதாகமங்களுள், வல்லோர்க்கு - எல்லாம் வல்ல பெரியோருக்கு, ஆகாதன - சம்மதமில்லாத விதிகளை, விழைகின்றார் - விரும்புகின்றவர்கள் ஙேகாரம் - ஙே என்னும் எழுத்தை, போல்வார் – ஒத்தவராவர்.

சர்வார்த்தங்களையும் கூறும், சுருதிகளில் உள்ள பூர்வபட்ச விதிகளையே கைக்கொள்வோர் மோட்ச விருப்பம் இல்லாதவர்கள் என்பதாம். **51**

## ஙை

**ஙையனையார் மேலோர் நவில்கின்ற நன்மொழியில்**
**ஐயம் நினைக்கின்ற வர்.**

மேலோர்- பெரியோர்களால், நவில்கின்ற - போதிக்கப் படுகின்ற, நன்மொழியில் - இதோபதேசச் சொற்களில், ஐயம் நினைக்கின்றவர் – சந்தேகப்படுகின்றவர்கள். ஙை அனையார் – ஙை என்னும் எழுத்தை ஒத்தவராவார்.

பெரியோர்களின் உபதேசத்தில் சந்தேகப்படுகின்றவர் முத்தி அடையார் என்பதாம். 52

## ஙொ

ஙொகரம் அதுபுரைவார் நூலுணர்ச்சி யின்றிப்
பகர மிகப்பூண் பவர்.

நூல் - நல்ல சாத்திரங்களைக் கற்பதனுல் உண்டாகும் உணர்ச்சி - நல்லறிவு, இன்றி - இல்லாமல், பகரம் — இடம்பத்தை, மிகப்பூண்பவர் — மிகவும் மேற்கொண்டு நடிப்பவர், ஙொகரம் அது — ஙொ என்னும் எழுத்தை. புரைவார் — ஒத்தவராவர்.

இடம்பம் உடையார் ஒரு பயனும் அடையார் என்பதாம். 53

## ஙோ

ஙோகார மேயனையாள் நுண்ணியரும் நண்ணு
கொண்கற்(கு)
ஆகா நடையி னவள்

நுண்ணியரும் — நுட்பமான உணர்வுடைய பெரியோரும், நண்ணு—விரும்பத்தக்க, கொண்கற்கு—தனது, நாயகனுக்கு, ஆகா — அமைந்து ஒழுக மாட்டாத, நடையினவள், (கூடா ஒழுக்கமுடைய) பெண்ணனவள், ஙோகாரமே — ஙோ என்னும் எழுத்தை, அனையாள் ஒத்தவளே ஆவாள்.

நாயகனுக்கு இசைந்து ஒழுகாதவள் எவ்வளவு நன்மையுள்ளவளாயினும் நற்கதி அடையாள் என்பதாம். 54

## ஙௌ

ஙௌவனையார் தம்முறவை நாடு மவர்க்கறுவித்
தெவ்வர்களை நம்பும் சிலர்.

தம் உறவை—தமது சிநேகத்தை, நாடும் அவர்—இச்சித்தவர்களை, கறுவி—கோபித்து, தெவ்வர்களை—பகைவரை நம்பும்—சிநேகிக்கும், சிலர்—சிலமாந்தர், ஙௌ அனையார்—ஙௌ என்னும் எழுத்தை ஒத்தவராவார்.

உறவினரைப் பகைத்து, பகைவரைச் சிநேகிக்க விரும்புவோர் கீழ்மக்களில் கடையாவார் என்பதாம். 55

## "சகர வருக்கம்"

### ச

**சஞ்சல மின்றித் தவமுயலுந் தக்கோருர்(கு)**
**அஞ்சனல்க வல்லானு ளான்.**

சஞ்சலம் இன்றி—மனத்தில் துன்பம் இல்லாமல், தவம் முயலும்—தவத்தைச் செய்யும், தக்கோருக்கு—உத்தமருக்கு எதிர் வந்து, அஞ்சல் நல்ல—அடைக்கலம் தந்து இரட்சிப்பதற்கு, வல்லாள்—எல்லாம் வல்ல கடவுள், உளான்—ஒருவர் இருக்கின்றார்.

மெய்த்தவம் உடையோர்க்குப் பிரத்தியட்சமாகி வேண்டியவைகளைத் தந்து காக்கவல்ல சர்வலோக நாயகன் ஒருவன் உண்டென்பதாம். 56

### சா

**சாலுங் கருணை தவத்திற் குறுதுணை என்(று)**
**ஒலும் பலநூ லுள.**

சாலுங்கருணை—மிகுந்த சீவகாருணியமானது, தவத்திற்கு—ஒருவர் செய்யும் தவத்தினுக்கு, உறுதுணை என்று—இன்றியமையாத்துணை என்று, ஓலும்—முறையிடுகின்ற, பல நூல்—பலநூல்கள், உள—இவ்வுலகத்துள்ளன.

சீவகாருணியமே தவத்திற்கு முக்கிய சகாயம் என்று வற்புறுத்தும் பல நூல்கள் இவ்வுலகத்துள்ளன என்பதாம். 57

### சி

**சித்திப் பெருக்கம் திகழப் பெற்றார்தவத்திற்**
**சத்தியமின் றென்னத் தகும் !**

சித்திப்பெருக்கம்—சித்தியென்னும் ஆக்கமானது, திகழ—தம்மிடத்தில் விளங்கும்படி, பெற்றூர்—பெற்றுக் கொள்ள [மாட்டாதவரது, தவத்தில்—தவத்தின் கண், சத்தியம்—சத்தியத்தன்மை, இன்று என்னத் தகும்—இல்லை என்று சொல்லப்படும்.

பொய்த்தவசிகட்கு அட்டமாசித்திகள் உண்டாகா என்பதாம். 58

சீ

சீர்பொருத்தப் பெற்றிருந்தும் சேதப் படாதபுகழ்
பார்பொருந்தச் செய்யார் பதர்.

சீர்—செல்வத்தை, பொருந்த—தம்மிடத்திற்பொருந்த, பெற்றிருந்தும்—அடைந்திருந்தும், சேதப்படாத—நாசம் அடையாத, புகழ்—கீர்த்தியை, [பார்—உலகத்தின் கண், பொருந்தச் செய்யார்—நிலைபெறச் மாட்டாதவர், பதர்—பதராவார்.

செல்வம் உடையவராயிருந்தும் தமது கீர்த்தியை உலகத்தின்கண் நிலைபெறச் செய்யாதவர்கள் பதருக்கு ஒப்பாவர் என்பதாம். 59

சு

சுண்ணந் திமிர்ந்தமுலைத் தோகையர்சொற் கைப்போரும்
வண்ணத் தமிழ்க்குருகு வார்.

சுண்ணம்—வாசனைக் குழம்போடு விரவிய கனகப்பொடிகளால், திமிர்ந்த — அப்பப்பட்டுள்ள, முலை—தனங்களை உடைய, தோகையர்—மங்கையரது, சொல்—சொற்களை, கைப்போரும்—வெறுத்துள்ள மெய்ஞ்ஞானிகளும், வண்ணத் தமிழுக்கு—சந்தத் தமிழ்ப் பாடல்களுக்கு, உருகுவார்—மனம் குழைவார்.

சந்தப்பாடலைக் கேட்ட ஞானிகளும் மனம் உருகி ஆனந்திப்பார் என்பதாம். 60

## சூ

**சூகரமே போலும் தொடக்கருக்குத் தொண்டுசெய்து**
**தேகம் வளர்ப்பார் சிலர்.**

சூகரமே போலும்—ஊர்ப் பன்றியையே ஒத்துள்ள, தொடக்கருக்கு—புலைத்தன்மையை உடையவருக்கு, தொண்டு செய்து—குற்றேவல் செய்து, தேகம்—தங்களுடைய உடல்களை, வளர்ப்பார்—வளர்த்துக் கொண்டு உழல்வோரும், சிலர்—இவ்வுலகத்திற் சிலர் உளர்.

புலைத்தன்மையை உடையவர்களிடத்தில் சேவித்து உடலோம்பும் பாதகரும் இப்பூமியில் சிலர் உளர் என்பதாம். 61

## செ

**செத்தும் பிறவாமை சித்திக்கச் சிந்திப்போன்**
**முத்துப்போன் றுள்ள முனி.**

செத்துப்பிறவாமை—இறப்பும், பிறப்புமற்ற மோட்சமானது, சித்திக்க—தனக்குக் கிடைக்கும் பொருட்டு, சித்திப்போன்—அதற்கேற்ற சாதனங்களை ஆராய்பவன், முத்துப் போன்றுள்ள—முத்தைப் போன்ற பரிபாகமுடைய, முனி—முனிவனாவான்.

முத்தி உபாயங்களை நன்கு ஆராய்ந்து உள்ளபடி உணர்ந்து அவ்வுபாயப்படி தீவிரமாய் முயல்கின்றவனே அதிபக்குவன் என்பதாம். 62

## சே

**சேணாட் டரம்பையர்க்காத் தின்னாத தின்னுமவர்**
**காணார்க ளுண்மைக் கதி.**

சேணாட்டு—தெய்வலோகத்துள்ள, அரம்பையர்க்கா—தெய்வப் பெண்களைக் கூடிச் சுகிப்பதின் பொருட்டு. தின்னாத—தின்னத்தகாதவைகளை, தின்னும் அவர்—தின்கின்றவர்கள், உண்மைக்கதி—சத்திய மோட்சத்தை காணார்கள்—அறிந்து அடைய மாட்டார்கள்.

அழியக் கூடிய தேவலோக போகத்தை இச்சித்து வேள்வியில் ஊன் தின்பவர் நித்தியமாகிய முத்தியின்பத்தை அறியார் என்பதாம். **63**

## சை

**சைவ முதலாம் சமயங்க ளோராறும்**
**தெய்வமுன்னை நாளிற் செயல்,**

சைவம் முதலாம் — சைவம் முதலாகச் சொல்லப்பட்ட, சமயங்கள் ஓர் ஆறும்—அறுவகைச் சமையங்களும், தெய்வம்—ஈசுவரனல், முன்னை நாளில்—ஆதிகாலத்தில், செயல்—உயிர்களின் நிமித்தம் அமைக்கப்பட்டவைகளாம்.

ஆறு சமயங்களும் கடவுளால் ஆதிகாலத்திலேயே நியமிக்கப்பட்டன என்பதாம்.

## சொ

**சொல்லும் பொருளும் சுமையாகத் தோன்றியபின்**
**அல்லும் பகலும் அறும்.**

சொல்லும்—வார்த்தைகளும், பொருளும்—அவற்றின் அர்த்தங்களும், சுமையாக—பாரமாக, தோன்றியபின்—ஒருவருக்குத் தோன்றியதற்குமேல், அல்லும் - ஆணவ மலமும், பகலும்—மாயாமலமும், அறும்—நீங்கும்.

ஒருவனுக்கு எல்லாத் தொழிலும் அடங்குமாயின் அதற்குமேல் ஆணவாதிமலங்கள் நீங்கும் என்பதாம். **65**

## சோ

**சோகம் வரினும் துணிவு பற்றித் தொண்டுசெய்வார்க்(கு)**
**ஏக னடிக்கீ ழிரை.**

சோகம்வரினும்—தவத்திற்கு இடையூருகப் பல துயரங்கள் நேரிடினும், துணிவுபற்றி—அவற்றிற்கு அஞ்சாது மனேதிடம் கொண்டு, தொண்டு செய்வோர்க்கு—கடவுளை உபாசிப்போர்க்கு, ஏகன்—ஒன்ருகிய அக்கடவுளினது, அடிக்கீழ்—திருவடிநீழலானது, இரை—இருப்பிடமாகும்.

திடசித்தத்தோடு இறைவனை உபாசிப்போர் அவ் இறைவனது திருவடி நிழலில் வசிப்பர் என்பதாம். 66

## சௌ

**சௌவிய மார்க்கந் தணந்தேனைத் தாழ்வடைவார்**
**ஔவிய நெஞ்சத் தவர்.**

சௌவியமார்க்கம்—நற்சமயங்களை, தணந்து—நீங்கி, ஏனை - மற்றைய, தாழ்வு—புறச்சமயங்களை, அடைவார்—சேர்பவர், ஔவிய—சகலதுர்க்குணங்களையுமுடைய, நெஞ்சத்தவர்—மனத்தினர் ஆவார்.

தமக்குரிய நன்மார்க்கத்தை விட்டு மற்றொரு தீயமார்க்கத்திற் சென்றவர் போன்ற துட்டர்கள் இல்லை என்பதாம். 67

## "ஞகர வருக்கம்"

## ஞ

**ஞமலி யெனத்திரிந்து நாட்கழிக்க லாகா (து)**
**அமல முத்தி வேண்டு மவர்.**

அமலமுத்தி—பரிசுத்தமாகிய முத்தியை, வேண்டும் அவர்—அடைய வேண்டினோர், ஞமலியென—நாயைப் போல, திரிந்து—ஐம்புலன் வழியே ஓடிஉழன்று, நாள்—வாழ் நாளை, கழிக்கல்ஆகாது—வீணாகப்போக்கலாகாது.

மோட்சத்தை இச்சித்தவர்கள் வீண் காலம் போக்கலா காது என்பதாம். 68

## ஞா

**ஞாலம் படைத்தளித்து நாசமுறச் செய்யுமொரு**
**மேலவனே மெய்யனைத்தின் மெய்.**

ஞாலம்—உலகத்தை, படைத்து—சிருட்டித்து, அளித்து—காத்து, நாசம்உற—பின்னர் நாசமடைய செய்

யும்—செய்யவல்ல, ஒருமேலவனே—ஒப்புயர்வற்றபரனே மெய் அனைத்தின்—உண்மைப் பொருள்கள் எல்லாவற்றுளும், மெய்—உண்மைப்பொருளாம்.

ஐந்தொழிற்பரஞ்சிய உலகமுதல்வனே ஒப்புயர் வில்லாத முதற் கடவுள் என்பதாகும். **69**

## ஞி

**ஞிமிறருந்தப் பாய்மதத்த நீள்மா இனத்தில்**
**தமிழ் வரைப்பால் தோன்றல் தலை.**

ஞிமிறு—வண்டுகள், அருந்த—உண்ணும்படியாக, பாய்—வழிந்து ஒழுகாநின்ற, மதத்த—மதத்தையுடைய, நீள்மா இனத்தில்—நெடிய யானை வருக்கங்களுள், தமிழ் வரைப் பால்—தமிழ் மணம் வீசும் பொதியை மலைச்சாரலில் தோன்றல்—உற்பத்தியாகிய யானைகள், தலை—சிறப்புள்ள வைகளாம்.

மதயானைகளுக்குள்ளே பொதியைமலைச் சாரலிற் பிறந்த யானைகளே சிறப்புடையவைகள் என்பதாம். **70**

## ஞீ

**ஞீயென் றிரையாத நீலவண்டொப் பாம்விழியார்த்**
**தாயென்றே கொள்வார் தவர்.**

ஞீ என்று— ஞீ என்னும் ஓசையுடன், இரையாத—சப்தி யாத, நீலவண்டு—கரிய வண்டுகளுக்கு, ஒப்பாம்—சமமான, விழியார்—கண்களையுடைய பெண்கள், தவர்—தவசிகள் தாய் என்றே—தம்முடைய அன்னையர்களாகவே, கொள் வார்—மதித்துக் கொள்ளுவார்!

தவசிகள் எல்லாப் பெண்களையும் தம் அன்னையர் என்றே காண்பர் என்பதாம். **71**

## ஞு

**ஞுகர மெனப்பயனில் நூல்விரிக்கு மாந்தர்**
**இகபரத்தும் பேறென் றிலார்.**

ஞகரம் என— ஞ என்னும் எழுத்தைப் போல், பயன் இல்—பெரும் பயனில்லாத, நூல்—சாத்திரங்களை, விரிக்கும்—கற்றுப்பிதற்றுகின்ற, மாந்தர்—மனிதர்கள், இக பரத்தும்—இம்மை, மறுமை என்று, சொல்லப்படும் இரு லோகங்களிலுள்ள, பேறு — பயன்களில், ஒன்று இலார்— ஒன்றையும் அடையார்.

பயனற்ற நூல்களைப் படித்துக் கொண்டு உழல்பவர் இருவகைப் பயன்களையும் அடையார் என்பதாம். **72**

## ஞா

**ஞாகாரம் போல்வளர்ந்து நூருண் டிருந்துமுத்திக்(கு)**
**ஏகா திறத்தல் இழிவு.**

ஞாகாரம்போல்—ஞா என்னும் எழுத்தைப் போல, வளர்ந்து—வளர்ச்சியடைந்து; நூறு ஆண்டு—அநேக நாட்கள், இருந்தும்—வாழ்ந்திருந்தும், முத்திக்கு—நித்திய மாகிய மோட்ச உலகத்துக்கு, ஏகாது—செல்லாமல், இறத்தல்—மரணமடைதல், இழிவு — மனிதராய் பிறந்த வருக்கு இழிவாகும்.

மனிதராய்ப் பிறந்து சரீரவளத்தோடு அநேக நாட்கள் வாழ்ந்திருந்தும், முத்தியடையாமல் வீணாக நாசமடைவது மானிடர்க்கு நிந்தையாகும் என்பதாம். **73**

## ஞெ

**ஞெண்டில் முழுமதியம் நேர்நாள் உதித்தாற்கும்**
**அண்டினரைக் காப்ப தணி.**

ஞெண்டில்—கடகராசியில், முழுமதியம்-முழுவலிபெற்ற பூர்ணச்சந்திரன், நேர்நாள்—தங்கும்தகுதியான காலத்தில், உதித்தாற்கும்—பிறந்தவனுக்கும், அண்டினரை—அடுத்த வர்களை, காப்பது—இரட்சிப்பது, அணி—அலங்காரமாகும்.

அரசாட்சி முதலிய பெருஞ்செல்வமுடையவருக்கும் தம்பால் அடைக்கலமாய் வந்தவர்களைப் பாதுகாப்பது சிறந்த ஆபரணம் ஆகும் என்பதாம். **74**

## ஞே

ஞேயமே யீரு நிகழ்த்துமொரு மூன்றினுண்மை
ஆயவல்லார் ஞானம் அழகு !

ஞேயமேயீரு—ஞாதுரு முதலாக ஞேயம் ஈருக, நிகழ்த்தும்—சொல்லப்பட்ட, ஒரு மூன்றின் உண்மை—திரிபடியினது, (காண்பான், காட்சி, காணப்படுபொருள் என்னும்) மூன்றினது உண்மையை, ஆயவல்லார்—ஆராய்ந்து அநுபவிக்கவல்லாரது, ஞானம்—ஞானமே, அழகு—அழகுடையதாகும்.

ஞாதுரு, ஞானம், ஞேயம் என்பவற்றின்—உண்மை இலக்கணங்களை அறிந்து அனுபவிக்கவல்லவரே மெஞ்ஞானிகளாவார் என்பதாம். **75**

## ஞை

ஞை யென்றற் கொல்கா நரரெல்லாம் நன்மையொன்றுஞ்
செய் யென்னிற் செய்யார் தெரிந்து !

ஞை என்றற்கு—ஞைஎன்றுயாவரும் இகழ்வதற்கு, ஒல்கா– சற்றும் வெட்கமடையாத, நரர்எல்லாம்—மனிதர் யாவரும், நன்மை—நன்மைகளை, செய்என்னில்—செய்யும்படி அறிவுடையோர் கூறினும், ஒன்றும்—ஒரு நன்மையையும், தெரிந்து—செய்யும் வகையறிந்து, செய்யார் — செய்யமாட்டார்கள்.

பழிக்கு அஞ்சாதவர்கள் ஒருநன்மையும் செய்தற்கு உடன்படார் என்பதாம். **76**

## ஞொ

ஞொள்கா நிலைநின்று நோற்ருேர் திருவுருவம்
உள்காதார்க் கில்லை யுரம் !

ஞொள்காநிலை– சலனமில்லாதநிலையில், நின்று—நிலைபெற்று, நோற்று—தவம்புரிந்து, ஓர்திருவுருவம்—ஒரு

மூர்த்தியின் திருவுருவத்தை, உள் காதார்க்கு—தியானி யாதவர்கட்கு, உரம்—அருள் வலிமை, இல்லை—உண்டாகாது.

உருவவழிபாட்டையுடைய மெய்த்தவசிகளுக்கேயன்றி மற்றையருக்கு அருட்சித்தி உண்டாகாது என்பதாம். 77

## ஞோ

**ஞோகரம் போற்றுலங்கி நுண்ணிமை யொன்றுந் தெரியாப்**
**போகாங்கர் பூமிப் பொறை**

ஞோகரம் போல்—ஞோஎன்னும் எழுத்தை ஒத்து, துலங்கி—விளங்கியும், நுண்ணிமை—கடவுள் உணர்ச்சி, ஒன்றும்—சிறிதும், தெரியா—இல்லாத, போகாங்கர்—விடயபோக உணர்வை உடையவர்கள், பூமி-இந்நிலத்திற்கு பொறை—பாரமாவார்கள்.

ஆத்தும விசாரணையில்லாத மூடர்கள் பூமிக்குச் சுமை யாவார் என்பதாம். 78

## ஞௌ

**ஞௌவிற் கடையாய் நவிலப் படா திருந்தும்**
**செல்விற் றிகழ்வார் சிலர் !**

ஞௌவில்—ஞௌஎன்னும் எழுத்தைப்போல, கடையாய்—கீழ்மை உடையவராய், நவிலப்படாது இருந்தும்—மேலோர்களால் புகழப் படாதிருந்தும், செல்வில்—நற்குண நற்செய்கையுடையவர்போல், திகழ்வார் — இப்பூமியில் விளங்குவார், சிலர்—சிலபேர்.

அகத்திற்கொடுமையும், புறத்தில் நன்மையும் உடைய வஞ்சகர் இப்பூமியிற்சிலர் உளர் என்பதாம். 79

## 'டகர வருக்கம்'

## ட

**இடம்பன் இழிஞனென்னும் ஈயார்க் கியல்பாம்**
**மடம்படுதீச் சொற்கருதார் வாய்.**

ஈயார்க்கு—ஈகையில்லாதவருக்கு, இயல்பாம்—சுபாவமாகிய, மடம்படு—பேதமையால் உண்டாகும், தீச்சொல்—கொடும் சொற்களை, கருதார்—நினைத்துப்பாராதவருடைய, வாய்—வாயானது, இடம்பன்—போலிப்பகட்டுச் சொல்லுடையவனை, இழிஞன்என்னும் — தாழ்ந்தவன் என்று சொல்லும்.

உலோபிகளுடைய தீமைகளை நன்குணராதவர் இடம்பனைத் தீயவன் என்றுரைப்பார் என்பதாம். **80**

## டா

இடாதார் மனைமுன்றிற் கேகுவிக்கும் தாமுன்
கொடாதார் வினைப்பேய்க் குழாம்.

தாம்—இப்பிறப்பில் தரித்திரராய் உள்ளவர்கள், முன்முற்பிறப்பின் கண், கொடாதார்—ஈகையில்லாதவர் ஆகையால் அவரை, வினைப்பேய்க்குழாம்—தீவினையாகிய பேய்க்கூட்டமானது, இடாதார்—உலோபிகளுடைய, மனை—வீட்டினது, முன்றிற்கு — வாயிலுக்கு, ஏகுவிக்கும்—போகச் செய்யும்.

முற்பிறப்பில் ஈகையில்லாதவர் அத்தீவினையால் இப்பிறப்பில் தரித்திரராய் உலோபிகளிடத்தில் சென்று இரப்பார் என்பதாம். **81**

## டி

இடிநாணச் சொற்பகரும் ஏந்திழையாட் கில்லை
குடிமாண்பு காக்கும் குணம்.

இடி—இடியோசையும், நாண-நாணும்படியாக, சொல் கொடுஞ் சொற்களை, பகரும்—பேசுகிற, ஏந்திழையாட்கு —பெண்ணுக்கு, குடிமாண்பு—தன்குல ஒழுக்கத்தை, காக்கும். பாதுகாக்கவல்ல, குணம்—நற்குணமானது, இல்லை—இராது

யாவரிடத்தும் கொடுஞ்சொற் சொல்லும் பெண்ணுக்கு நற்குண நற்செய்கைகள் இல்லை என்பதாம். **82**

௮ = ௲

**இடீர் நும் குடர் விழையும் எஃகவே லோர்க்கும்**
**கொடீர் கொல் உணர்மின் குறித்து !**

இடீர்—ஈகையில்லாத லோபிகளே, நும்—உங்களுடைய, குடர்—குடல்களை, விழையும்—கிழிக்கவிரும்பும், எஃகவேலோர்க்கும்—கூர்மை பொருந்திய ஆயுதத்தை உடையவர்க்கும் கூட, கொடீர் கொல்—கொடுக்கமாட்டீர்களா? குறித்து—இதை உங்கள் உள்ளத்தில் குறித்து உணர்மின்—ஆலோசித்தறியுங்கள்.

உலோபிகளே ! உங்களைக் கொல்லத்துணியும் கொடுங்கோல் அரசர் முதலானவர்களுக்குங்கூட உங்கள் பொருளைக் கொடுக்க மாட்டீர்களா ? யோசித்துச் சொல்லுங்கள் என்பதாம். **83**

டு

**உடுக்கை நிகரிடையார் ஒண் முலைமால் விஞ்சிக்**
**கெடுக்கை யுற்றார்க் கில்லை கிளை !**

உடுக்கை—உடுக்கையென்னும் வாத்தியத்தை, நிகர்—ஒத்த, இடையார்—சுருங்கிய இடையையுடைய பெண்களுக்குள்ள, ஒண்—ஒள்ளிய, முலை—தனங்களால் உண்டாகும், மால்—மயக்கமானது, விஞ்சி—அதிகரித்து, கெடுக்கை—தங்களைக் கெடுக்கும் தன்மையில், உற்றார்க்கு—கூடாவொழுக்கம் பொருந்தினோர்க்கு, கிளை— உறவினர் முதலோர், இல்லை—இல்லையாகும்.

பெண்களால் உண்டாகும் மயக்கம் அதிகரித்து தங்களைக் கெடுக்க அதனால் கெட்டோர்க்கு யாவரும் பகையாவார் என்பதாம். **84**

ரு

உடுஉக் களைதலேய்க்கும் ஊனென் றுணரான்
கெடுஉத் திளைக்கும் கிறி.

ஊன்—சரீரமானது, உடுஉ—உடுத்து, களைதல்—களை யும் ஆடையை, ஏய்க்கும்—ஒக்கும், என்று—என்றுஆராய்ந்து உணரான்—அறியமாட்டாத மூடன், கெடுஉ — ஆன்ம லாபத்தை இழந்து, கிறி—நிந்தையை, திளைக்கும்—அநு பவிப்பான்.

உடம்பு எவ்விதத்தும் அழியும் என்று உணராமல் கொலை, புலை முதலிய பெரும் பாவங்களையே செய்து அச் சரீரத்தைப் பாதுகாக்க நினைக்கும் மூடன், ஆன்மலாபமு மின்றி பின்பு இழிந்த மிருகங்களாய்ப் பிறந்து யாவராலும் நிந்திக்கப்படுவான் என்பதாம். 85

டெ

இடெனிற் பழிசொல்வோர் எவ்விதத்தும் தாம்பின்
கொடென இரப்பார் குறுகி.

இடுஎனில்—நல்லவர்களுக்கு வேண்டுவதைக் கொடுப் பாயாக என்று ஒருவர் கூறில், பழி சொல்வோர்—அவ்விரு வரையும் நிந்திக்கும் உலோபிகள், தாம்—செல்வராயிருந்த தாமே, பின்—பின்பு, குறுகி—தரித்திரத்தாற்குன்றி, கொடு என—பிறரிடத்திற் போய் எனக்கு இன்னது தருவாயாக என்று கேட்டு, எவ்விதத்தும்—எந்த விதத்திலும், இரப்பார் —யாசிப்பார்.

நல்லோரை நிந்தித்த லோபிகள் பின் தரித்திரராய் இரந்து உழல்வார் என்பதாம். 86

டே

இடேனென் றிருமாக்கும் ஈனர்தம் முன் கூற்றும்
விடேனென் னுறுக்கிவரு மே.

இடேன்என்று—ஒருவருக்கும் ஒன்றும் கொடேன் என்று, இறுமாக்கும் — இறுமாப்படைந்திருக்கும், ஈனர்தம்முன் — உலோபிகளுக்கு எதிரே, கூற்றும்—யமனும், விடேன் என்று —இனிஉங்களை விடமாட்டேன் என்று, உறுக்கி—பய முறுத்திக் கொண்டு, வரும்—வருவான்.

கொடேன் என்று இறுமாப்புற்றிருக்கும் உலோபிகளை எமன் விடேன் என்று பயமுறுத்திக் கொண்டு வருவான் என்பதாம். **87**

## டை

**இடையுண் டிலையெனும்சிற் றேந்திழையார் கண்வேற்**
**படைவென்றோர்க் கில்லை பழி.**

உண்டு இலைஎன்னும்— தோன்றாமையால் உண்டோ இல்லையோ எனக் கண்டோர்க்குச் சந்தேகத்தைத் தருகிற, இடை—இடையையும், சிற்றுஏந்துஇழையார் — மங்கைப் பருவத்தையும் உள்ள பெண்களுடைய, கண்—கண்களாகிய, வேற்படை — வேலாயுதங்களை, வென்றோர்க்கு — செயித்த வர்களுக்கு, பழி—நிந்தை, இல்லை—உண்டாகாது.

மங்கையர் மோகத்தில் அழுந்தாதாருக்கு நிந்தை இல்லை என்பதாம். **88**

## டொ

**உடொழிற் பயன்கிடைத்தாங் குற்சாகங் கொண்டு**
**கெடொருவன் கீழவரிற் கீழ்.**

உள்—தன்னால் விரும்பப்பட்ட, தொழில் — தொழி லினது முதிர்ச்சியால் உண்டாகும், பயன்—பயனானது, இடைத்தாங்கு — கைகூடாதிருக்கவும், கூடியதாகவே துணிந்து, உற்சாகங் கொண்டு — மனஎழுச்சி கொண்டு கெடு—கெடுகிற, ஒருவன்—ஒருமனிதன், கீழவரில்—கீழோர் பலருள்ளும், கீழ்—தாழ்ந்தவனாவான்.

தான் செய்யுந் தொழிலால் வரத்தக்கதாகத்தான் விரும்பியிருக்கும் பயனுனது கிடையாதிருக்கவும், கிடைத்த தாகத் திருப்தியடைந்து கெடுகிறவனைக் காட்டிலும், தாழ்ந் தோர் எவ்விடத்தும் இல்லை என்பதாம். 89

## டோ

உடோகையுடன் உண்பயனும் ஒன்றுது லோபம்
படோ ஓர் பெருஞ்செல்வன் பால்

உலோபம்—லோப குணத்தை, படு—பொருந்திய, ஓர் பெருஞ்செல்வன்பால்—ஒருபெருஞ் செல்வம் உடைய வனிடத்து உடு ஓகையுடன்—உடுத்தலால் வரும் மகிழ் வுடன், உண்பயனும்—உண்ணுதலால் வரும் திருப்தியும், ஒன்றுது—உண்டாகாது.

பெருஞ்செல்வம் உடையவனுயினும், உலோபியானவன் உண்ணல், உடுத்தல்களால் வரும் பயனையும் பெருது இழப் பான் என்பதாம். 90

## டௌ

இடௌகாரத் தின்ளுருவம் ஏய்ந்தாங் கொருநீர்
கொடுவிளங்கல் முன்னூழ்க் குறி !

இடௌகாரத்து—டௌ என்னும் எழுத்தினிடத் துள்ள, இள் உருவம்—ளகர எழுத்தானது, ஏய்ந்தாங்கு. உறுப்பாகப் பொருந்தியதுபோல், ஒரு நீர்—ஒருவர் தம்மி டத்துப் பொருந்தத்தகாத ஓர் குணத்தை, கொடு—தமக்கு அங்கமாகக் கொண்டு, விளங்கல்—விளங்குவாராயின், அவ் விளக்கம் முன் ஊழ் அவர் பழவினைப்பயன் இது என்று யாவரும் உணர்தற்கேற்ற, குறி—ஓர் அடையாளமாகும்.

ளகர வடிவ எழுத்து டௌகாரத்தில் இருந்தும் பொருத்தமில்லாத, வகர ஒற்றின் ஒலியை இயக்குதல்போல ஒருவர் தமது ஒழுக்கத்துக்குமாறுகிய ஒரு குணமுடைய வராயின் அதைப்பழவினைப்பயன் என்று அறியவேண்டும் என்பதாம். 91

## "ணகர வருக்கம்"

### ண

**இணங்காரை வென்றிட் டிமாக்கும் வீரக்**
**குணங்காவலர்க் குறியகோள்!**

இணங்காரை—சத்துருக்களை, வென்றிட்டு—வெற்றி கொண்டு, இறுமாக்கும்—மிகமகிழ்தற்கு, ஏதுவாகிய வீரக்குணம் — ஆண்மையே, காவலர்க்கு — அரசர்களுக்கு உரிய— உரித்தாகிய கோள்—குணமாகும்.

பகைவருக்குச் சற்றும் அஞ்சாத பராக்கிரமமே அரசருக்கு அவசியம் வேண்டிய குணமாகும் என்பதாம். 92

### ணு

**இணுப்புச்செய் வாரைநம்பி யேங்கும்வினை நீங்கப்**
**பணுத்தவத்தா லில்லை பயன்**

இணுப்பு - ஏமாற்றுஞ் செய்கையை, செய்வாரை - செய்கின்ற கீழ்மக்களை, நம்பி - மேலோர்கள் என்று நம்பி, ஏங்கும் - துக்கித்து உழலுகிற, வினை - தொழிலானது, நீங்க - நீங்கும்படி, பணு - செய்யாத, தவத்தால் - தவத்தினுல், பயன் - பிரயோசனம், இல்லை - உண்டாகாது.

இம்மையில் யாவரும் அறியும்படி ஒன்றைச் செய்து காட்ட முடியாத தவத்தால் பயன் இல்லை என்பதாம். 93

### ணி

**இணியிற் பரனுலகத் தேற்றவல்ல தியாரும்**
**அணியத் தகும் நல் அறம்**

இணியில் - ஏணியைப் போல், பரன் உலகத்து - கடவுள் உலகத்தில், ஏற்ற வல்லது - தன்னை அடுத்தவரை

ஏறும்படி செய்யவல்லது யாதெனில்? அது, யாரும் - எல்லோரும், அணியத்தகும் - அலங்கரித்துச் சொல்லத்தக்க நல் - நன்மையுடைய, அறம் - தருமமாம்.

புண்ணியமானது தன்னையடுத்த வரை நற்கதி அடையச் செய்யும் என்பதாம். 94

## ணீ

இணீற்றிற் புகரமுத லின்மா இடல்தோய்
வெணீற்றின் நெறிபலவா மே !

இண்—இடையிலே ணகர ஒற்றையும், ஈற்றில்—முடிவிலே, புகரம்—பு என்னும் எழுத்தையும், முதலில்—முகப்பிலே, மா—மா என்னும் எழுத்தையும், இடல்—இடுதலால், உண்டாகும் மாண்பு என்னும் பதத்தின், அருத்தமாகிய மாட்சியை, தோய்—பொருந்திய, வெள்—வெள்ளிய, நீற்றின் விபூதி சம்பந்தமாகிய, நெறி—சமயங்கள், பலஆம் —அநேகவிதமாம்.

விபூதிசம்பந்தமாகிய மதங்கள் பலவாயிருக்கின்றன என்பதாம். 95

## ணு

உணுங் கடற்பின் விட்டான்செய் யொண்கலை தீ தென்கை
குணுங் கரினும் தாழ்வார் குணம் !

உணுங்கடல் - ஆசமனநீராக்கியுண்டு வயிற்றுள் அடக்கிய சமுத்திரத்தை, பின் - மறுபடியும், விட்டான் - விடுத்த அகத்திய முனிவரால், செய் - உண்டாக்கப்பட்ட, ஒண் கலை - ஒள்ளிய தமிழ் மொழியை, தீது என்கை - குற்றமுடையதாய்க் கருதி கூறுதல், குணுக்கரினும் - சண்டாளரைப் பார்க்கிலும், தாழ்வார் - தாழ்ந்தவரது, குணம் - தன்மையாம்.

தமிழ் மொழி தாழ்மையுடைய தென்பவர் புலையரினும் கடையாவார் என்பதாம். 96

## ஞூ

உஞூஉத் துயில்கையெண்ணி யொல்கிப் பரனை
நஞூஉப் பரவல் நலம்.

உஞூஉ - தெய்வபக்தி இல்லாதவர்தாம் தினந் தோறும் வேண்டியவைகளைப் புசித்துக்கொண்டும். துயில்கை - நித்திரை செய்து கொண்டும் காலம் கழிக்கும் தன்மையை, எண்ணி - தாமே ஆலோசித்து, ஒல்கி - இச் செய்கை விலங்குகட்கே இயல்பு என்றறிந்து நாணி, பரனை - இறைவனை, நஞூஉ - விரும்பிப், பரவல் - தினந்தோறும் துதிப்பாராயின், அதுநலம் - நன்மையாகும்.

தினந்தோறும் உண்டு, உறங்கி, நாள் கழிப்பவர் பயபக்தியோடு கடவுளை முக்கரணங்களாலும் வழிபடுபவ ராயின் அது நன்மையைத் தரும் என்பதாம். 97

## ணெ

இணென் பொறிமுற் சாகாரம் ஏய்ந்த அகட்டால்
அணங்குறுதல் பாவத் தரசு !

இண் என் பொறிமுன் - ணகர ஒற்றின் முகப்பில் சாகாரம் - சா என்னும் எழுத்தான து, ஏய்ந்த - பொருந்திய பதமாகிய சாண் என்னும் அளவினையுடைய, அகட்டால் - வயிறு வளர்க்கையின் நிமித்தத்தால், அணங்குறுதல் - பெருந்துன்பத்தில் அழுந்துவது, பாவத்து அரசு - பாவங் களுள் தலைமை பெற்றபாவமாகும்.

முற்பிறப்பில் செய்த பெரும்பாவமே இப்பிறப்பில் வயிறு வளர்க்கையின் நிமித்தத்தால் பெருந்துன்பத்தில் அழுத்துவிக்கும் என்பதாம். 98

## ணே

இணேய்ந்த வீகாரத் தியார்க்கும் உதவி
பணே மென்பார் தேடும் பணம் !

இண் - ணகர ஒற்றை, ஏய்ந்த - ஈற்றின் கண் உடைய, வீகாரத்து – வீகாரமாகிய வீண் என்னும் பதத்தின் அருத்த மாகிய பயனின்மையை உடையது யாது? எனில், அது யார்க்கும் - ஒருவருக்கும், உதவி - உபகாரத்தை, பணேம் - செய்யமாட்டோம், என்பார் – என்பவர்களால், தேடும் - சம்பாதிக்கப்பட்ட, பணம் - பொருளாகும்.

உதவி செய்யாதவர் சம்பாதிக்கிற பொருள் பயனற்ற தென்பதாம். 99

## ணை

இணைக்கும்ப மென்முலையார் இச்சைவிஞ்சித் தாமே
அணைக்கின்ற தின்பம் அணி !

இணை - ஒன்றையொன்று ஒத்த இரண்டாகிய, கும்பம் - குடம் போன்ற, மெல் - மெல்லிய, முலையார் - தனங்களை யுடைய பெண்கள், இச்சை - ஆசையானது, விஞ்சி - அதி கரித்து, தாமே - அவர்களே, அணைக்கின்ற – வலிந்து தழுவிப் புணர்வதால் வரும் இன்பமே, இன்பத்து - காம இன்பத் துக்கு, அணி - அலங்காரமாகும்.

ஆண்மக்களை பெண்மக்களே வலிதில் தழுவிக் கொடுக் கும் இன்பமே உயர்ந்த இன்பமாகும் என்பதாம், எனவே, சிவ முயற்சியின்றித் 'திருவருட்சத்தி உண்டாவது தெய்வீகம் என்னும் குறிப்புப் பொருள் தோன்ற நிற்பது காண்க. 100

## ணொ

உணொருவனை மற்றோர் உயிருய்வான் மாற்றல்
தணவாரே உண்மைத் தவர்!

உண் - உணவுகொள்ளுகின்ற, ஒருவனை - ஒரு மனிதனைப் புசித்தலில் நின்றும் விலக்குவது பாவமே ஆயினும், மற்று ஓர் உயிர் - வேறு ஒரு உயிரானது, உய்வான் - உயிர் பெற்று உய்யும் நிமித்தம், மாற்றல் - விலக்குதல், உண்மைத்தவர் - உண்மைத் தவசிகள், தணவார் – நீக்கவே மாட்டார்கள்.

உணவு உண்பவனை விலக்குவது பாவமாயினும், மற்றோர் உயிர் அவனாற் சிவிக்கும் சமயம் நேரிடுமாயின், சீவ கருணையுடைய பெரியோர்கள், அவனை அப்புசிப்பில் நின்றும் விலக்கி அவ்வுயிரைக் காப்பார் என்பதாம். 101

## ஞே

உஞேம்படிசொற் றேனும் உணர்வுறுத்து வார்நீர்
திஞேங்கலின்மே லென்கை திறம் !

உள் - கேட்போருடைய மனம், நோகும்படி - வருந்தும்படி, சொற்றேனும் - சொல்லியாவது, உணர்வு - நல்லறிவை, உறுத்துவார் - அவர்களிடத்து வரும்படி செய்வோருடைய, நீர் - தன்மை, திண் - திட்பத்தையுடைய ஓங்கலின் - மலையினும், மேல் என் கை - உயர்ச்சி என்பது, திறம் - உறுதியாம்.

மனம் வருந்தச் சொல்லியாவது கேட்போருக்கு அறிவு நிலை பெறும்படி செய்வாரது தன்மை மலையினும் பெரிது என்பதாம். 102

## ணௌ

இணௌகாரத் திற்புணர்ந்தாங் கீடேற்றம் வேண்டா
உணவளவிற் றுய்ப்பார் உளர் !

இண் - ணகரஒற்றானது, ஔகாரத்தில் ஔ என்னும் உயிருடன், புணர்ந்தாங்கு - சேர்ந்தாற்போல, ஈடேற்றம் - ஈடேறுதற்குக் காரணமாகியதான தருமங்களைச் செய்ய, வேண்டாது - விரும்பாமல், உணவு அளவில் - அருந்தல், பொருந்தல் ஆகியபோகம் மாத்திரம், துய்ப்பார் - அநுபவிப்பார், உளர் - இவ்வுலகில் பலர் இருக்கின்றார்கள்.

ணௌ, எழுத்து வரிசையிலிருந்தும் எப்பயனுமில்லாததுபோல, அறச் செயல்களைச் சற்றும் விரும்பாமல் அருந்தல், பொருந்தல்களையே விரும்பிப் பயனின்றி வாழ்பவர் இவ்வுலகில் பலர் உளர் என்பதாம். 103

## "தகர வருக்கம்"

### த

**தந்தை பெறும் புகழைத் தம் புகழ்ச்சியால் மறைக்கும்**
**விந்தையுற்ருர் மானிடரில் மேல்!**

தந்தை - தகப்பனுல், பெறும் - பெறப்பட்ட, புகழை - கீர்த்தியை, தம் - தம்முடைய, புகழ்ச்சியால் - பெருங் கீர்த்தியினுல், மறைக்கும் - மறைக்கின்ற, விந்தை உற்ருர் - ஆச்சரியச் செய்கைகளே உடைய புத்திரர்கள், மானிடரில் - மனிதர்களுக்குள், மேல் - உயர்ந்தவர்கள்.

தம்புகழைக் கொண்டு தமது தந்தையின் புகழை மூடி விடும் நற்புத்திரர்களே மேன்மக்களாவர் என்பதாம். 104

### தா

**தானம் வெறுப்பார் தவத்திற் குவமையெண்ணில்**
**மானம் இழந்த மகள்.**

எண்ணில் - நன்கு ஆராயுமிடத்து, தானம் - தருமத் தின் கண், வெறுப்பார் - சற்றும் விருப்பமில்லாத தவசி களது, தவத்திற்கு - தவத்தினுக்கு, மானம் - கற்பு நிலையை, இழந்த - கைவிட்ட, மகள் - பெண்ணே, உவமை - உவ மானம் ஆவாள்.

தானத்தில் உள்ள அபிமானத்தை விட்டவரது தவ மானது, மானத்தை கைவிட்ட மங்கையை ஒக்கும் என்ப தாம். 105

### தி

**திங்கட் குடையானும் தெய்வமன்றி யின்றென்பார்**
**தங்கட்கே வீடும் தகும்!**

திங்கட்குடையானும் - சந்திரனேத் தனக்குக் குடை யாகக் கொண்ட மன்மதனும், தெய்வம் அன்றி - கடவு

ளுக்கு அன்னியமாய், இன்று என்பார் தங்கட்கே - இல்லை யென்னும் உணர்வுடையோர்க்கே, வீடும் - முத்தி அடைதலும், தகும் - தகுதியாகும்.

மன்மதனையும் கடவுளுக்கு அன்னியமின்றிக் காண்போர்க்குப் பந்த நீக்கம் உண்டாகும் என்பதாம். 106

## தீ

தீயிற் கொடுஞ்சொற் றினம்பேசு வார்பலரும்
நாயிற் கடையாம் நரர்!

தீயில் - நெருப்பை ஒத்த, கொடும்சொல் - கொடிய சொற்களை, தினம் - நாள்தோறும், பேசுவார் - சொல்லுகிறவர், பலரும் - யாவரும், நாயில் - நாயைப் பார்க்கிலும், கடைஆம் - கீழ்ப்பட்ட, நரர் - மனிதர் ஆவர்.

தயை சற்றும் இன்றித் தீயை ஒத்த சொற்களையே யாவரிடத்துஞ் சொல்லும் மனிதர்கள் நாயினும் கடையாவார் என்பதாம். 107

## து

துன்பம் பலவரினும் தொட்டநிலை விட்டிழியார்
இன்பமிகப் பெறுவா ரே!

துன்பம் - இடையூறுகள், பல - அநேகவிதமாக, வரினும் - ஒருமித்து வந்தாலும், தொட்ட - தாம் அநுட்டிக்கத் தொடங்கிய, நிலை - நன்னிலையை, விட்டுஇழியார் - விட்டு நீங்காதவர், இன்பம் - இன்பத்தை, மிக - அதிகமாக, பெறுவார் - அடைவார்.

நன்னிலையை அநுட்டிப்பவர் எவ்விதத் துன்பங்களுக்கும் அஞ்சாமல் அநுட்டிப்பாராயின், முடிவில் பேரின்பத்தை அநுபவிப்பார் என்பதாம். 108

## தூ

**தூங்காது தூங்கித் தொடுகுறியில் நிற்போர்க்கே**
**ஏங்கா துவக்கும் இயல்பு.**

தூங்காது - நித்திராவத்தையிலும் சென்று விடாமல், தூங்கி – சாக்கிர அவத்தையிலும் நில்லாமல், தொடு- தாம் குறித்த, குறியில் – இலட்சியத்தில், நிற்போர்க்கே - அசைவறத் துரியாவத்தையில் நிற்பவருக்கே, ஏங்காது - அச்சம்அற, உவக்கும்–மகிழும், இயல்பு - தன்மை உண்டாகும்.

மூர்த்தித் தியானத்திலே மனத்தை நிறுத்திய தீரர்களே சகல இன்பத்தையும் அடைவார்கள் என்பதாம். 109

## தெ

**தெள்ளிய நூலினத்துட் சீறியதூன் தின்னுதல்**
**வள்ளிமைஎன் றோது வது!**

தெள்ளிய-ஆராயப்பட்ட, நூல் இனத்துள்-நூல்களுக்குள், சீரியது-சிறப்புள்ள நூலானது, ஊன்-புலாலை, தின்னுதல்-தின்னுமையே, வள்ளிமை-சகல நற்பயன்களையும் தரவல்ல புண்ணியம், என்று-என்பதாக, ஓதுவது-போதிப்பதேயாகும்.

புலால் உண்ணுமையே பெரும் புண்ணியம் என்று சாதித்துக்கூறும் நூலே சிறந்த நூல் என்பதாம். 110

## தே

**தேவர் புவியில்வரச் சிந்திக்கு மாறுணரார்**
**பாவலவ ரேனும் பதர்.**

தேவர்-தேவர்கள் எல்லாம், புவியில்-பூலோகத்தில், வர - வந்து பிறக்கும் பொருட்டு, சிந்திக்கும் ஆறு-விருப்பம் கொண்டிருக்கும் விதத்தை. உணரார்–அறிந்து கொள்ள மாட்டாதவர், பாவலவரேனும் – பெரும் புலவர்களாய் இருந்த போதிலும், பதர்-பதருக்கு ஒப்பாவார்.

மனிதப் பிறப்பையே சதா விரும்பிக் கொண்டிருக்கிற தேவர்கள் இயல்பை உணராதவர் பதருக்கு ஒப்பாவார் என்பதாம். **111**

## தை

தைக்கக் கணைதெறிப்பான் தன்னைவிட்டு வில்லையெள்ளும்
மக்களதே மூட மதி.

மூடமதி-மூடபுத்தியானது, தைக்க-தேகத்தில் தைக்கும் படி, கணை-பானத்தை, தெறிப்பான் தன்னை—எய்கின்ற வனை, விட்டு-நிந்தியாதுவிட்டு, வில்லை-அவன் கைவில்லினை, எள்ளும்-நிந்திக்கும், மக்களதே-மக்களுடையதேயாகும்.

மூடமதியானது பாணம் எய்தவனை விட்டு அவன் வில்லினை நிந்திக்கும் தன்மையையுடைய மனிதர்களிடத்தே யாகும் என்பதாம். **112**

## தொ

தொண்டுபுரிந் தீசன் துதிபுகல மாட்டாதார்
கண்டுகொள்வ தில்லை கதி!

ஈசன்-எல்லாம் வல்ல இறைவனை, தொண்டு புரிந்து-தியானபூசைகளால் வழிபட்டு, துதி—அவ் இறைவனுடைய தோத்திரங்களை, புகலமாட்டாதார்—பாடித் துதி செய்யாத வர்கள், கதி-முத்திபேற்றை, கண்டு—உள்ளபடி உணர்ந்து, கொள்வதுஇல்லை-அடைவது இல்லையாகும்.

இறைவனுக்கு மெய்யடிமையாகி அவ் இறைவனது, மகிமைகளைத் துதிக்காதவர் கதி அடையமாட்டார்கள் என்பதாம். **113**

## தோ

தோலாத வீரர் தொழுந்தாள் உடைத்தவரால்
ஏலாத வாறென் றிலை!

தோலாத-பகைவரால் தோல்வி அடையாத, வீரர் — சௌகரியமுள்ள அரசர்களும், தொழும்-வணங்கத் தக்க,

தான்உடை-திருவடிகளை உடைய, தவரால்-தவசிகளால், ஏலாதவாறு-இயலாத காரியம், ஒன்று-யாதென்றும், இலை-இல்லையாம்.

தவசிகளால் செய்து முடிக்கத் தகாத பெருங் காரியம் யாதொன்றும் இல்லை என்பதாம். 114

## தௌ

தௌவை கினியோர் சரதந் தவம்தருமம்
கௌவையென நீத்தார் களே

சரதம்-சத்தியமும், தவம்-தவமும், தருமம்-புண்ணியமும், கௌவையென-துன்பம் தருபவைகளென்று, நீத்தார் களே-கைவிட்டவர்களே, தௌவைக்கு-மூதேவிக்கு, இனியார்-நல்லவர்களென்று சொல்லப்படுவார்.

சத்தியம், முதலிய நன்மைகளை வெறுத்துக் கைவிட்டவர்களே மூதேவிக்கு நல்லவர் என்பதாம். 115

## "நகர வருக்கம்"

## ந

நங்கையரிற் கற்பினர்க்கே நானிலத்தும் மேனிலத்தும்
சங்கையற்ற மேன்மை தகும்!

நங்கையரில் - பெண்களுக்குள், கற்பினர்க்கே - கற்புத் தன்மை உடையவர்க்கே, நானிலத்தும்-பூலோகத்தினிடத்தும், மேனிலத்தும்-தேவலோகத்தினிடத்தும், சங்கையற்ற-அளவிறந்த, மேன்மை-மேம்பாடு உண்டாகும் என்பது, தகும்-தகுதியாகும்.

பெண்களுக்குள்ளே பதிவிரதைகளுக்கு மாத்திரமே எவ்வுலகத்திலும் பெருஞ்சிறப்புண்டாம் என்பது சத்தியம் என்பதாம். 116

## நா

நாரியருங் கற்கை நலமென் றுரைக்குநரைப்
பாரில் இகழ்வார் பலர்.

நாரியரும்-பெண்களும், கற்கை-கல்விப் பயிற்சி உடைய வராயிருத்தல், நலமென்று-நன்மைஎன்று, உரைக்குநரை - சொல்லும் அறிவுடையோரை, இகழ்வார்-நிந்திக்கும் மூடர் கள், பாரில்-இப்பூமியில், பலர்—அநேகர்.

பெண் கல்வியை நிந்திக்கும் மூடர்கள் இவ்வுலகத்தில் அநேகர் என்பதாம். 117

**நி**

**நித்தன் அருட்கடலின் நேயம்வரக் கற்றவர்தாம்**
**எத்தகவோ ரேனும்வல்லோ ரே!**

நித்தன்—நித்தியத் தன்மையையுடைய இறைவனது, அருட்கடலில் — அளவுபடாத அருளினிடத்து, நேயம்— அதிகப் பிரியம், வர —தமக்கு உண்டாகும்படி, கற்றவர் தாம்—கற்றுணர்ந்தவர்கள், எத்தகவோரேனும் —எவ்விதத் தாழ்ச்சி உடையவராயினும், வல்லோரே—வல்லவர்களே யாவர்.

திருவருட் சத்தியாலுண்டாகும் சித்திகளிடத்துத் தங்களுக்குப் பிரியமுண்டாகும்படி கற்றுணர்ந்தவர்களே மேலோர் என்பதாம். 118

**நீ**

**நீதி மறந்து நெடுநீர்ப் புவிபரப்பான்**
**தீதினத்தின் மேலாம் திறம்.**

நீதி - நடுவுநிலைமையாகிய நீதியை, மறந்து - மறந்த வனாய், நெடுநீர் – கடலாற் சூழப்பட்ட, புவி - பூமியை, புரப்பான் - ஆள்கை செய்பவனது, தீது - கொடுமை யானது, இனத்தின் – தீமைக் கூட்டங்களுக்குள், மேலாம் - முதன்மையுடையதாம் என்பது, திறம் – உறுதியாகும்.

கொடுங்கோல் அரசனுடைய தீமையே தீமைகளுக்குள் சிறந்தது என்பதாம். 119

## நு

நுண்ணிய மேலோர் நுவல்கின்ற நூல்வழிசெய்
புண்ணியமே வண்மைப் பொருள்.

நுண்ணிய - நுட்பமான அறிவினையுடைய, மேலோர் - பெரியோர்களால் செய்யப்பட்ட, நூல் — சாத்திரங்கள், நுவல்கின்ற — சொல்கின்ற, வழி - நெறியின்படி, செய் - செய்யும், புண்ணியமே - தருமமே, வண்மைப் பொருள் - எல்லாப் பயனையும் தரும் உண்மைப் பொருளாம்.

நன்மை தீமைகளை உள்ளபடியே பகுத்துணர்ந்த பெரியோர்களால் கூறப்பட்ட நூல்களின் விதிப்படி செய்யும் புண்ணியமே எல்லா நன்மைகளையும் தரும் என்பதாம். 120

## நூ

நூலிழந்தும் கேளியிச்சை நூருதாள் மற்றொருவன்
தாலிகட்டிக் கொள்ளத் தகும்.

நூல் - தன் நாயகன் பூட்டிய மங்கலநாணனது, இழந்தும் - நீங்கியபின்னும், கேளிச்சை - புணர்ச்சியின் அவாவை, நூருதாள் — வெறுக்கச்சக்தியில்லாதபெண், மற்றொருவன் - வேறொரு நாயகனால் அணியப்படும், தாலி — மங்கலநூலை, கட்டிக்கொள்ளல் - தரித்துக் கொள்ளுதல், தகுதி — தகுதியாகும்.

காம இன்பத்தில் அதிக இச்சையுடையவளாகில் கைம் பெண்ணும், வேறொரு நாயகனை மணம் செய்து கொள்வதே நன்மை என்பதாம். 121

## நெ

நெல்லிக் கனியில் நிறையருட்சீர் கைவருமுன்
புல்லினர் போற் பேசல்தரும் புண்.

நிறை - பரிபூரணமாகிய, அருட்சீர் - திருவருட் செய்வமானது, நெல்லிக்கனியில் - உள்ளங்கையில் நெல்லிக் கனியைப்போல, கைவருமுன் - சித்திப்பதற்கு முன்னரே,

புல்லினர் போல் - அச்செல்வத்தைப் பெற்றவர்கள் போல், பேசல் - பிறர் அறியக்கூறுதல், புண் - பெருந்துயரத்தை, தரும் - கொடுக்கும்.

திருவருட்பேறுபெறு முன்னர், அதனைப் பெற்ற மெஞ்ஞானிகளைப் போற் பேசுவது, பெருந்துன்பம் தரும் என்பதாம். 122

## நே

நேடிப் பரவுமன்பர் செஞ்சத்துட் சென்றிறைவன்
ஆடித் திகழ்வதுமெய் யாம்.

இறைவன் - உலக முதல்வனான கடவுள், நேடி - தனது இலக்கணத்தை உள்ளபடி விசாரித்துணர்ந்து, பரவும் - தோத்திரஞ் செய்யும், அன்பர் தொண்டர்களுடைய, நெஞ்சத்துள் - மனத்திடனித்து, சென்று - பல வித உருவங் கொண்டெழுந்தருளி, ஆடி - விளையாடி, திகழ்வது - விளங்குவது மெய்யாம் - உண்மையாகும்.

இறைவன், உள்ளபடி வழிபடும் மெய்யன்பரது மன வெளியில் தோன்றித் திருவிளையாடல் செய்வது உண்மையாகும் என்பதாம். 123

## நை

நையாது நைந்துநலம் வேண்டும் மெய்யடியார்
ஓய்யாரம் பின்றோன் றுறும்.

நையாது - வருந்தாமல், நைந்து - வருந்தி, நலம் - நன்மையை, வேண்டும் - அடைய விரும்பும், மெய் - உண்மையன்புடைய, அடியார் - தொண்டரது, ஓய்யாரம் - கம்பீரச் செய்கையானது, பின் தோன்றுறும் - முதலில் தோன்றாதிருப்பினும் அருள் பெற்ற பின்பு தோன்றும்.

தெய்வ உபாசனையுடைய மெய்யன்பரது மகிமையானது, தொடக்கத்தில் விளங்காதிருந்து, பின்பு நன்றாக யாவருக்கும் விளங்குமென்பதாம். 124

## நொ

**நொந்து பரதவித்து நோலாற் கொழியாதே**
**வந்து பிறக்கும் வழி.**

நொந்து – பிறவித்துயரால் தளர்வடைந்து, பரத வித்து - கொலை முதலியவற்ருல் உயிர்கள் படும் துயரங் களைச் சகியாமை பற்றிப் பரதவித்து, நோலாற்கு - தவம் செய்யாதவனுக்கு, வந்து - ஒரு தாய் வயிற்றை அடைந்து, பிறக்கும் வழி – பிறக்கும் முறைமை, ஒழியாதே - நீங்கவே மாட்டாது.

அருட்சித்தி விருப்பமும் சீவகருணையும் இல்லாத தவசிக்குப் பிறவிப்பிணி நீங்காது என்பதாம். **125**

## நோ

**நோன்பென்கை கொன்று நுகராமை என்றுரைத்தாள்**
**தான்பெண் இனத்தின் தலை.**

நோன்பு என்கை—தவம் என்று சொல்லப்படுவது, கொன்று – ஒருயிரைக் கொலை செய்து, நுகராமை—அதன் ஊனைத் தின்ஞமையாம், என்று—என்பதாய், உரைத்தாள் தான்—சொல்லிய ஒளவையாரே, பெண்ணினத்தின் பெண்கள் கூட்டத்தில், தலை—உயர்ந்தவள்.

நோன்பு என்பது கொன்று தின்ஞமை என்று கூறிய ஒளவையாரே பெண்களில் சிறப்புடையாள் என்பதாம். **126**

## நௌ

**நௌவி விழியார் நலஞ்சிறிதும் நாட்டாத**
**செவ்விய நூற் பாஇனியா தே.**

நௌவி—மான் போன்ற, விழியார்—கண்களை உடைய மங்கையரது, நலம்—அழகினை, சிறிதும்—கொஞ்சம்கூட, நாட்டாத—எடுத்துக்கூருத, செவ்விய—செம்மையான, நூற்பா —செய்யுளையுடைய நூலாயினும், இனியாதே—இனிமையைக் கொடாது.

*3128—4*

சிற்றின்பச்சுவை கொஞ்சமும் இல்லாத நூல் வாசிப்ப வருக்கும் கேட்பவருக்கும் இனிமையைக் கொடாது என்ப தாம். 127

## பகர வருக்கம்

### ப

பத்தி வலையிற் பரன்படுமா ரோர்ந்தாரே
சித்தி முத்தி யெய்தும் சிலர்.

சித்திமுத்தி—சித்திமுத்தி என்னும் இரண்டையும், எய்தும்—அடைகின்ற, சிலர்—அரியதவசிகள் யாரெனில், பத்திவலையில்—பத்தி என்னும் வலையினிடத்து, பரன்—ஜெக தீசுவரன், படுமாறி—அகப்படும் விதத்தை, ஓர்ந்தர்ரே நன் குணர்ந்தவர்களேயாம்.

பழுதற்ற பத்திமார்க்கத்தில் நின்று இறைவனைக் கண்டு சித்திமுத்திகளை அடைபவர்கள் சிவதவசிகளே என்ப தாம். 128

### பா

பாக மதுரப் பனுவல்பகர் பாவலவர்
சீகரநீர்ப் பாரிற் சிலர்.

பாகம்—பக்குவமும், மதுரம்—மிகுந்தசுவையும் பொருந்த, பனுவல்—நூல்களை, பகர்—இயற்றும், பாவலவர்—புலவர்கள், சீகரம்—அலைகளையுடைய, நீர்—கடலாற் சூழப்பட்ட, பாரில்—பூமியின் கண், சிலர்—சிலருளர்.

பொருத்தமும், இனிமையும், அமையும்படி நூல்களை இயற்றும் புலவர்கள், இவ்வுலகில் சிலரேயாவர் என்பதாம். 129

### பி

பின்னபிற பின்னவனைப் பேசும் பிழையுடையார்
என்ன பயனடைவா ரே!

பின்னம்—வேறுபாடானது, உற—பொருந்தும்படியாக முன்னவனை—இறைவனை, பேசும்—நிந்தித்துப் பேசும், பிழையுடையார்—குற்றமுடையமதவாதிகள், என்னபயன்- எவ்விதப்பயனை, அடைவார்—பெறுவர்ாகள்.

முதல்வனுகிய இறைவனது உண்மையை உணராமல் ஒருவருக்கொருவர் பகை கொண்டு அவ் இறைவனையே நிந்தித்துக்கூறும் சமயவாதிகள் என்ன பயனைப் பெறுவார் கள் என்பதாம். 130

பீ

பீழைக்குள் அஞ்சிப் பெருங்களிப்பிற் கிச்சைகொள்ளா
ஏழைக்கு வீடும் இலை.

பீழைக்கு- தனக்கு நேரிடும் துன்பங்களுக்கு, உள்அஞ்சி- மனதுள் பயம் அடைந்து, பெருங்களிப்பிற்கு - பெரு மகிழ்ச்சி அடைதற்கு, இச்சை கொள்ளா – அருளைப் பெற விருப்பம் கொள்ளாத, ஏழைக்கு - மனவுறுதியற்ற ஒரு வனுக்கு, வீடும் - பந்தநீக்கமும், இல்லை - உண்டாகாது.

துன்பங்களுக்கு மிகவும் பயந்து திரு அருட்சித்தியைப் பெற விரும்பாத தவசிக்கு முத்தியும் உண்டாகாது என்பதாம். 131

பு

புற்கறிப்பால் நீடும் புலாலும் புசிக்கும் அவர்
அற்கை விழை வாரெம் மவர் !

புல் - புற்களை, கறிப்பால் - மேய்வதனுல், நீடும் - விருத்தியாகும், புலாலும் - உயிர்களின் மாமிசத்தையும், புசிக்கும் அவர் - தின்னுகிறவர்கள்யாவரும், அற்கை – நசிக் கும் விதத்தை, விழைவார் - இச்சித்து ஆராய்பவர், எம்மவர் - எம்முடைய உறவினர்களாவார்கள்.

புற்களைத்தின்று வாழும் உயிர்களையும் கொன்றுண் ணும் கொடியவர்களது அழிவை விரும்புவோர் யாவரும் எம் உறவினராவார் என்பதாம். 132

## பூ

**பூனைக்குள் ஒல்கிப் புலிநாமென் றோதுமவர்**
**வானைத் துறந்தவர் போல் வார் !**

பூனைக்கு - பூனைக்கு ஒப்பாகிய அற்பர்களுக்கும், உள்ஒல்கி- மனக்கலக்கம் அடைபவராகி, புலிநாமென்று - வீரத்தன்மை டையதவசிகளே நாமும் என்று, ஓதுமவர் - வாயினுர் யுசால்லிக் கொண்டு திரிபவர், வானை - வானுலக இன்பத்தை, துறந்தவர் - வெறுத்த மெய்ஞ்ஞானிகளை, போல்வார் - ஒப்பவராவார், (மெய்ஞ்ஞானிகளாகார்)

அற்பச் செல்வர்களுக்கும் பயந்து மனத்தளர்வடையும் தவசிகள், மேலாகிய செல்வத்தையுடைய அரசர்களும் வணக்கத்தக்க மெய்ஞானிகளாகத் தங்களை மதித்துக் கொண்டு உழல்பவர்கள் என்பதாம். 133

## பெ

**பெற்ற தொளித்துப் பெருதாரிற் பேசுநரை**
**நற்றரைமின் கண்டு நகும் !**

பெற்றது - தாம்பெற்ற திருஅருட்பேற்றை, ஒளித்து – பிறர்க்குத் தோன்ருது மறைத்து, பெருதாரில் - அதனைப் பெருதவரைப் போல், பேசுநரை-பேசும்தொழிலினுடைய வரை, நல் - நன்மைபொருந்திய, தரைமின் - பூமிதேவி யானவள், கண்டு - பார்த்து, நகும் –சிரிப்பாள்.

அருட்சித்தியைப் பெற்ருேர்கள் பெருதவர்போற் காட்டுவது இயல்பு ஆயினும், உயிர்களுக்கு இடுக்கணுற்ற போதும், உதவி செய்யா திருப்பாராயின் அவர்களைப் பூமி தேவி கண்டு சிரிப்பாள் என்பதாம். 134

## பே

**பேசாத ஞானநிலை பெற்றும் பிரான் அருளால்,**
**ஆசாணுத் தோன்றுநருண் டால் !**

பேசாத - சொல்லமுடியாத, ஞானநிலை - மெய்ஞ்ஞான நிலைமையை, (சமரச நிச்சயத்தை) பெற்றும் - தாம் அடைந்திருந்தும், பிரான் அருளால் - இறைவன் திருவுள்ளப்படி, ஆசாறு - ஒருசமயத்திற்குத் தலைவராகி, தோற்றுநர் - விளங்குகிறவர்களும், உண்டு - உண்டு

மௌன நிலையைப் பெற்ற உண்மை ஞானிகளும், இறைவன் சம்மதத்திறுல், ஒரு மதத்தலைவர்களாக விளங்குவதும், உண்டென்பதாம். **135**

## பை

**பையன்ன அல்குற்பறவை அனையாரால்**
**மெய்யருளார் மேற்பொரும்வில் வேள் !**

பையன்ன — பாம்பின் படத்தை ஒத்த, அல்குல் — உறுப்பினையுடைய, பரவை — பரவை நாச்சியாரை: அனையாரால் — ஒத்தமங்கையர் பொருட்டு, மெய் — உண்மையாகிய, அருளார்மேல் — திருஅருட்பேற்றைப் பெற்ற மெஞ்ஞானிகள் பேரிலும், வில் — கருப்பு வில்லையுடைய, வேள் — மன்மதனுனவன், பொரும்—போர் செய்யத் தொடங்குவர்.

மன்மதனுனவன் சிலமங்கையரது புண்ணியம் காரணமாக மெய்ஞானிகளுக்கும் மோகத்தை உண்டுபண்ணுவான் என்பதாம். **136**

## பொ

**பொக்கத் துயர்ச்சி புலாலுடல்என் றோராதார்**
**எக்கலைச்சீர் ஆய்ந்திடினும் என் !**

புலால் — மாமிசச் சுமையாகிய, உடல் — சரீரமானது பொக்கத்து — பொய்ப்பதார்த்தங்களுக்குள், உயர்ச்சி — சிறந்தது, என்று — என்பதாக, ஓராதார் — பகுத்தறியாதவர்கள், எக்கலை — எந்த நூல்களின் சீர், — சிறப்பியல்களை, ஆய்ந்திடினும் — கற்றறிந்தாராயினும்,என் —என்னபயனை அடைவார்கள்.

உடலைப்போலப் பொய்ப் பொருள் வேறொன்றில்லை என்று உணராதவர்கள், பல நூல்களையும் நன்குஉணர்ந்த வாராயினும் அவ்வுணர்ச்சியால் பயனில்லை என்பதாம். 137

## போ

போக முத்தி என்ப பொருவிலருட் சத்திமுலை
ஆக லுணர்வார் அரிது !

போகம் முத்தி என்ப — போகம் என்றும் மோட்சம் என்றும் சொல்லப்படும் இவ்விரண்டும், பொருவில்-சமான மில்லாத, அருட்சத்தி — திருஅருட்சத்தியினுடைய, முலை யாகல் — இரண்டு கொங்கைகளாய் இருத்தலை, உணர் வார் — அறிந்து கொள்பவர், அரிது — அருமையாகும்.

இன்பமும் முத்தியும் ஆகிய இவ்விரண்டும் திருஅருட் சக்தியின் கொங்கைகளென்று உணர்ந்து கொள்பவர் அரியர் என்பதாம். 138

## பௌ

பௌவ நெடுந்தானைப் பார்மகிழ்ச்சி நாடுமவர்
தெவ்வர் வலிக் கஞ்சாச் சிலர்.

பௌவம் — கடலாகிய, நெடும் — நீண்ட, தானை — உடையை யுடுத்த, பார்— பூமி தேவியை, மகிழ்ச்சி—மகிழ் விக்கும் பொருட்டு, நாடுமவர்—அதற்கேற்ற வழிகளை ஆராய்பவர் யாவரென்னில், தெவ்வர்—பகைவர்களுடைய வலிக்கு—ஆற்றலுக்கு, அஞ்சா—சற்றும் பயப்படாத, சிலர்— சில தவசிகளாகும்.

பூமி தேவியைச் சந்தோஷிப்பிக்கும் பொருட்டு, அதற்குத் தக்கவைகளை யோசித்துச் செய்பவர் சில தவசி களேயாவார் என்பதாம். 139

## மகர வருக்கம்

### ம

மஞ்சன்ன கூந்தல் மடவார் புலவிகண்டுள்
அஞ்சல் புருடர்க் கணி !

மஞ்சுஅன்ன —மேகம் போன்ற, கூந்தல்—கரிய கூந்தலை யுடைய, மடவார்—பெண்களுக்கு, புலவி—ஊடலானது, கண்டு — இயல்பாயுள்ள செயலென்றறிந்து, உள்—மனத் தினிடத்து, அஞ்சல்—அச்சமுற்றெழுதுதல், புருடர்க்கு— ஆடவர்களுக்கு, அணி—அழகாகும்.

ஊடலானது பெண்களுக்கு இயல்பாயுள்ளது என்பதை நன்குணர்ந்து தக்கபடி அச்சம் பொருந்திய மனத்தோடு ஒழுகுதல் ஆண் மக்களுக்கு நற்செய்கையாகும் என்பதாம். **140**

### மா

மாயை இறைவன் வலிக்கயலாம் என்றிகழும்
பேயை மதிக்கை பிழை !

மாயை—மாயாசக்தியானது, இறைவன்—பரனுடைய, வலிக்கு—வல்லமைக்கு, அயலாம்என்று—வேருகிய பொய்ப் பொருளென்று, இகழும்—நிந்தை செய்யும், பேயை— உண்மையுணர்வற்றவனை, மதிக்கை — மெய்யறிவுடையவ னென்று மதிப்பது, பிழை—குற்றமாகும்.

இறைவனுடைய அருட்சத்திக்கு, மாயா சக்தியை வேறு படுத்தி இகழ்வோரை மதிக்கலாகாதென்பதாம். **141**

### மி

மின்மினியோய்ப் புன்னரசை வென்றிடினும் மெய்த்தவரைக்
கன்மநெறி யால்வெல்லார் காண் !

மின்மினி — மின்மினிப் பூச்சியானது, போய் — சென் றெதிர்த்து, புள்அரசை — கருடனை, வென்றிடினும் —

செயித்து விடும் காலம் வந்தாலும், மெய்த்தவரை — உண்மைத் தவசிகளை, கன்மநெறியார் — கன்ம வாதிகள், வெல்லார்—செயிக்க மாட்டார்கள், காண்—அறிவாயாக.

மெய்த்தவமுடையவர்களுக்கு ஒரு காலத்திலும் கன்மிகளால் வெற்றிக் குறைவு உண்டாகாது என்பதாம். 142

மீ

**மீனனைய கண்ணார் விருப்பம் தண வாதார்**
**ஞானநிலை தேரில் நகை !**

மீன் அனைய—சேல் மீன்களைப் போன்ற, கண்ணார்—கண்களையுடைய மங்கையரிடத்து, விருப்பம் — தங்களுக்குள்ள ஆசையை, தணவாதார் — நீக்கமாட்டாதவர்களது, ஞானநிலை — ஞானத்தின் நிலைமையை, தேரின் —ஆராயுமிடத்து, நகை—நிந்தையாய் முடியும்.

பெண்ணாசையை நீக்கமாட்டாதவரது ஞானம் பெரும் பழியை விளைக்கும் என்பதாம். 143

மு

**முக்கட் பயனாய மூவாச் சமரசச்சீர்**
**மக்கட்கும் எய்து வது !**

முக்கண்—மூன்றாகிய ஞானக் கண்களினது, பயனாய—முழுப் பிரயோசனமாகிய, மூவா—கெடாத, சமரசச்சீர் — சமரசத் தன்மையானது, மக்கட்கும் — மனிதர்களுக்கும், எய்துவது—கிடைக்கத்தக்கதாம்.

வேதாந்த நிலை, சித்தாந்த நிலை அவற்றின் தாயாகிய பொதுநிலை என்னும் மூன்றுவித ஞானங்களையுமுடைய சமரசத் தன்மையானது, மனிதருக்கும் கிடைக்கத் தக்கதாகும் என்பதாம். 144

மூ

**மூதறிஞன் என்பான் முருடத் தொழில் முதலாம்**
**கோதழிக்க வல்ல குரு.**

முருடத் தொழில்—கொலைத் தொழிலே, முதலாம் — ஆதியாகிய, கோது—குற்றங்களை, அழிக்கவல்ல—யாரிடத்தும் நிலை பெருமற் கொடுக்கவல்ல. குரு — ஆசிரியனே, மூதறிஞன்—முதிர்ந்த பேறறிவுடையவன், என்பான் — என்று யாராலும் சொல்லப்படுவான்.

யாவரிடத்துமுள்ள கொடுஞ் செயல்களை மாற்றி ஆள வல்ல சற்குருவே முதிர்ந்த நல்லறிவுடையவன் என்று யாவ ராலும் புகழப்படுவான் என்பதாம். **145**

## மெ

**மெல்லினன்றி நாவினுக்கு வேண்டிரதம் தோன்ருதால்**
**சொல்லின் முயல்வே துணிவு.**

மெல்லின் அன்றி—ஒரு பொருளை வாயிலிட்டு மென்ருல் அல்லது, நாவினுக்கு — ஒருவருடைய நாவுக்கு, வேண்டு— விருப்பமாகிய, இரதம்—சுவையானது, தோன்ருதால் — உண்டாகாதாகையால், சொல்லின்—எல்லாப் பயன்களை யும் தரவல்லது எது என்று ஆய்ந்து சொல்லுமிடத்து, முயல்வே—அவ்வலிமையை உடையது முயற்சியே என்று சொல்வது, துணிவு—அறிவுடையோர் யாவருக்கும் துணி வேயாம்.

சுவைத்தாலன்றி நாவினுக்குச் சுவை தோன்ருதது போல, முயற்சித்தாலன்றி அறம் முதலிய பயன்கள் சித்தி யாது என்பதாம். **146**

## மே

**மேலைத் தவத்தை வியப்பவரும் வேண்டளவிற்**
**சீலத் தவஞ்செய் திடார் !**

மேலைத்தவத்தை—தாம் முற்பிறப்பில் செய்த தவத் தினை, வியப்பவரும்—புகழ்ந்து கொண்டாடுகிறவர்களும், வேண்டளவில்—தங்களால் இயன்ற மாத்திரம், சீலம்— பரிசுத்தமாகிய, தவம்—தவத்தை, செய்திடார்—இப்பிறப் பிலும் செய்யமாட்டார்.

அறிவற்றவர்கள் போனபிறப்பில் செய்த தவத்தை மட்டும் புகழ்வார்கள். இப்பிறப்பிலும் இயன்ற மாத்திரம் நல்ல தவத்தைச் செய்யார்கள் என்பதாம். **147**

## மை

**மையும் கதிர்மதியும் வாயுஅங்கி நீரும் அஞ்சக்**
**செய்யும் தவமே சிறப்பு !**

மையும்—மேகமும், கதிர்—சூரியனும், மதியும்—சந்திரனும், வாயு—காற்றும், அங்கி—அக்கினியும், நீரும்—தண்ணீரும், அஞ்ச—பின்னர் அஞ்சி ஏவல் செய்யும்படி, செய்யும்—ஒருவர் செய்யத் தொடங்கிய, தவமே — தவந்தானே, சிறப்பு—உயர்வுடையதாகும்.

தவம் நிறைவேறிய பின்னர் மேகம் முதலியவைகளும் அஞ்சி ஏவல் செய்யும் நிமித்தம், ஒருவர் தொடங்கிய தவமே சிறப்புடையது என்பதாம். **148**

## மொ

**மொக்குள் அனைய முலையார் மயல்வலையின்**
**சிக்குவிடும் வாழ்வே சிவம்!**

மொக்குள்—நீர்க்குமிழியை, அனைய—போன்ற, முலையார்—கொங்கைகளையுடைய மங்கையரால் உண்டாகும், மயல்—மயக்கமாகிய, வலையின்—வலையில் அகப்பட்டு உழல்கிற, சிக்கு—தடுமாற்றமானது, விடும்—முற்றும் நீங்கிய, வாழ்வே—வாழ்க்கையே, சிவம்—முத்தியாகும் !

பெண்ணாசை நீங்கிய பெருவாழ்வே மோட்சம் ஆகும் என்பதாம். **149**

## மோ

**மோக்கமுட லோடருளின் மூழ்க லெனமொழிவார்**
**வாக்கதனூ டில்லை மருள் !**

மோக்கம்—முத்தியானது, உடலோடு—தூல சரீரத்துடனே, அருளில்—அருட்கடலில், மூழ்கல்—அழுந்திமறைதலே, என—என்று, மொழிவார் — உரைப்பவரது, வாக்கதனூடு—வார்த்தைகளில், மருள்—மயக்கமானது, இல்லை — இராது.

தூய உடலுடனே திருவருளில் ஒன்றுபடுவதே உண்மை முத்தி என்று கூறும் பெரியோரின் வசனத்தின் கண் விபரீதம் இராதென்பதாம். 150

## மௌ

மௌவல் அரும்பனைய வாணகையார் வஞ்சத்தால்
எவ்வமுற்று ளார்க்கெண் இலை!

மௌவல்—முல்லையினது, அரும்பனைய — அரும்புகளை ஒத்த, வாள்—ஒளிபொருந்திய, நகையார்—பற்களையுடைய பெண்களது, வஞ்சத்தால்—மோசச் செய்கைகளினால், எவ்வம்—துன்பத்தை, உற்றுளார்க்கு — அடைந்துள்ளவர்களுக்கு, எண் இலை—அளவில்லை.

பெண்களால் மோசம் போனவர்கள் ஓர் அளவில்லை என்பதாம். 151

## யகர வருக்கம்

## ய

யக்கார்பிரான் போல்வார் எனினும் இயற்புலமை
மக்களள வில்லார் வலி !

யக்கர்—யட்சர்களுக்கு, பிரான்—தலைவனாகிய குபேரனை, போல்வார்—ஒத்தவாழ்க்கையர், எனினும்—என்றாலும், இயல்—தகுதியாகிய, புலமை—கல்வியறிவினையுடைய, மக்கள்—புலவர்களுக்கு, அளவு—சரியான, வலி—வல்லமையை, இல்லார்—இல்லாதவராவார்.

செல்வர்கள், வாழ்வில் குபேரனை ஒத்துள்ளாரெனினும், வல்லபத்தில் புலவர்களுக்கு இணையாகாரென்பதாம். **152**

## யா

**யாகக் கொலைபழியன் றென்றிசைப்பார் யாரெனினும்**
**ஏகத் துவமுணரா ரே !**

யாகக்கொலை—வேள்வியினிடத்துச் செய்யும் கொலைத் தொழிலானது, பழியன்று—நிந்தையாகாது, என்று—எனத் துணிந்து, இசைப்பார்—சொல்பவர், யாரெனினும்—எவ்வகைமேம்பாடுடையாராயினும் அவர்கள், ஏகத்துவம்—சிவபரஐக்கியமாகிய சத்திய முத்தியினது நிலையை, உணராரே—அறியாதவர்களேயாவர்.

யாகக் கொலையை நன்கு மதித்துச் சொல்பவர்கள் எவ்வகை மேன்மையான அறிவுடையவராயினும் அவர்கள் உண்மை முத்தி நிலையை அறியாதவர்களேயாவர் என்பதாம். **153**

## யி

**இயிற்றலைபோற் கோடுமுகத் தேந்திழையார்மாலால்**
**செயிர்க்கடலுண் டாதல் திறம்**

இயில்—இஎன்னும் எழுத்தின்கண் தலைபோல்—அதன் சிரமானது வளைந்திருப்பது போல், கோடும்—நாணத்தால் வளைந்திருக்கும், முகத்து-முகத்தையுடைய, ஏந்துஇழையார்-கற்புடைய மாதர்கள் பேரில் கொண்ட, மாலால்—இச்சையால், செயிர்—துன்பமானது, கடல்—சமுத்திரம்போல், உண்டாதல்—உண்டாகுமென்பது, திறம்—உறுதியாம்.

கற்புடைய பெண்கள் பேரில் மோகித்தவர் எவராலும் பெருந்துயரத்தழுந்துவது திண்ணமாகும் என்பதாம் **154**

## யீ

**இயீயிரண்டும் சொற்றுங் கெயிறிலங்க ஏற்பீர்**
**செயீரிறைவன் தொண்டே தினம் !**

இ, ஈ இரண்டும்—இ, ஈ என்னும் இரண்டு அட்சரங்களை யும், சொற்ருங்கு—தனித்தனி உச்சரிப்பது போல், எயிறு—பற்களை, இலங்க—பிறர்க்குத் தோன்றக் காட்டி, ஏற்பீர்—யாசிப்பவர்களே! இறைவன்—கடவுளைக் குறித்துச் செய்யும், தொண்டே—நல்ல தொண்டுகளையே, தினம்-நாள்தோறும், செய்யீர்—செய்யுங்கள்.

செல்வர்களைக் கெஞ்சி யாசிக்கும் யாசர்களே! நீங்கள் இடைவிடாது நல்ல தொண்டுகளைச் செய்யுங்கள் என்பதாம். 155

## யு

**யுகப்பெயரும் நாட்பெயரும் உண்டுபண்ண லென்னும்**
**நிகழ்ச்சிவரல் மேலாம் நிலை !**

யுகப்பெரும்—யுகம் என்னும் பெயரும், நாட்பெயரும், உண்டு பண்ணல்—ஒருவரால் கற்பிக்கப்பட்டவைகள், என்னும்—என்கிற நிகழ்ச்சி இயல்பாகிய தெளிவு, வரல்—ஒருவர் உள்ளத்தில் தோன்றுவது, மேலாம் நிலை—உயர்ந்த பக்குவநிலையாம்.

யுகம் முதலிய கால வேறுபாடுகளைக் கற்பனை என்று உள்ளபடி உணர்வது சத்தினி பாதத்து உத்தமர் நிலை என்பதாம். 156

## யூ

**யூகத் துயர்ச்சி உடலாதி முப்பொருளும்**
**ஏகற் குதவலென்பேம் யாம் !**

யூகத்து—யுத்திகளுக்குள், உயர்ச்சி—உயர்வுடையது எது என்ருல், உடல்ஆதி—சரீரம் முதலிய, முப்பொருளும்—மூன்று பொருள்களையும், ஏகற்கு—ஏகனுகிய கடவுளுக்கு உதவல்—உண்மையாகக் கொடுத்து விடுவதே, என்பேம்—என்று சொல்வோம்.

உடல், பொருள், ஆவி மூன்றையும் இறைவனிடத்தில் உண்மையாக ஒப்புவித்தவனே ஊகத்தில் உயர்ந்தவன் என்பதாம். **157**

## யெ

**இயென் பொறிபன் மூன்றுமொற் றேய்சொனுவ லாதீந்து**
**யென்கை பலநூலு ரை!**

இயென்பொறி—இன்னும் உயிரெழுத்தானது, பன் மூன்றும் ஒற்று— பதின் மூன்றுவது ஒற்றெழுத்தாகிய ல் என்பதோடு, ஏய்—பொருந்திய இல் என்னும், பதப்பொரு ளாகிய, சொல்—இல்லை என்னும் சொல்லை, நுவலாது—சொல்லாமல், ஈந்து—வறியவர்களுக்குக் கொடுத்து, உய்—உய்வாயாக, என்கை—என்று கூறுகிற வார்த்தை, பலநூல்—பல சாத்திரங்களும், உரை—ஒத்துக் கொள்ளும் வார்த்தையாம்.

இல்லை என்று சொல்லாமல் வறியவர்களுக்குக் கொடுத்து வாழும்படி, யாம் கூறும் வார்த்தை சகல சாத்திர சம்மதமானது என்பதாம். **158**

## யே

**இயேயீயா மாறுசுழி ஈற்றிலிடல் போன்ற**
**பொயேய் நெறியில் நல்லோர் புகார்**

இயே—இன்னும் குற்றுயிரே (குறில் எழுத்தே) ஈ ஆமாறு—ஈ என்னும் நெட்டுயிராகும்படி (நெடிலாக), சுழி—சுழியை, ஈற்றில்—இறுதியில், இடல் போன்ற [இ என்றபடி] இட்டு வழங்குதல் போல ஒருவரால் இடையிற் கற்பிக்கப்பட்ட, பொய்—அசத்தியச் சொல், ஏய்—பொருந்திய, நெறியில்—மதங்களில், நல்லோர்—நன்மை பொருந்திய மேன் மக்கள், புகார்—செல்ல மாட்டார்.

இடையில் ஒருவராற் கற்பிக்கப்பட்ட குற்றம் பொருந்திய மதங்களில் நல்லோர் சேரமாட்டார் என்பதாம். **159**

## யை

இயையா மனக்களிற்ரே டென்றும்போர் செய்து
தயையுறுத்து மாறே தவம்

இயையா—உடன்படாத, மனம்—மனம் என்று சொல்லப்பட்ட, களிற்ரேடு—ஆண்யானையோடு, என்றும்—எப்போதும், போர் செய்து—எதிர்த்து சண்டையிட்டு, தயை—சீவ காருண்யம் பதியும்படி, உறுத்து மாறே—வற்புறுத்தி மனத்திற்கு உணர்த்துவதே, தவம்—தவமாகும்.

கொடிதாகிய மனத்தை எவ்விதத்தும் சீவகாருணிய வடிவமாக்குதே தவமாகும் என்பதாம். 160

## யொ

உயொரு குரவன் உருநாட்டம் பற்றி
மெயொளி பெறல்நல் விதி !

உய்—பந்தத்தில் நின்றும் உய்யப்பெற்ற, ஒரு—ஒப்பற்ற, குரவன்—ஆசிரியனது, உருநாட்டம்—திருவுருவத்தியானத்தை, பற்றி—மனத்தால் இடைவிடாது செய்து, மெய்—உண்மையாகிய, ஒளி—ஞானத்தை, பெறல்—பெற்றுக்கொள்வது, நல்விதி—உத்தமபக்குவருக்கு நல்ல ஒழுக்கம் ஆம்.

தத்துவ ஞானம் பெற்ற சற்குருவின் திரு உருவத்தைத் தியானித்து, பற்றுகளை ஒழித்துக்கொள்வதே பக்குவர்களது நற்செய்கையாகும் என்பதாம். 161

## யோ

யோகம் பழுதென் ஞெருங்கு விடச் சொல்லின்
மாக மேற் பாயும் மனம் !

யோகம் — உருவத்தியானமானது, பழுது என்று — குற்றம் தருவதெனத்துணிந்து, ஒருங்கு — அத்தியானம் வழிபாடு முழுமையும், விட — விடும்படி, சொல்லின் —

போதித்தால், மனம் — மனமானது, மாகம் — ஆகாயத்திற்கு, மேல் — அப்புறத்திலும், பாயும் — தாவும்.

உருவத்தியானம் முழுமையும் ஒழித்துவிடின் மனமானது சற்றும் நிலைபெருமல் விஷய இச்சையில் ஓடும் என்பதாம். **162**

## யெள

**யெளவனத்தின் மாதவப் பேற் றிச்சை வரப் பெற்ருேனே**
**மெளவலந்திண் டோட்ட கரிய மால் !**

யெளவனத்தில் —இளமைப்பருவத்தில்,மாதவப்பேற்று — மேலாகிய தவத்தின் பயன் என்னும் போக மோட்சங்களிடத்து, இச்சை — மிகுந்த விருப்பமானது, வர — வரும்படி, பெற்ருேனே — பெற்றுக் கொண்டவனே, மெளவல் — வன மல்லிகை மாலையையும், அம் - அழகையும், திண் — வலிமையையும் உள்ள, தோள் — புயத்தையுடைய, கரிய — நீல நிறம் பொருந்திய, மால் — விட்டுணு மூர்த்திக்கு ஒப்பாவான்.

இளமைப் பருவத்திற்ருனே சித்தி முத்திகளிடத்தில் அதிதீவிர விருப்பமுடையவன் விட்டுணு மூர்த்திக்கு ஒப்பாவான் என்பதாம். **163**

### ர கர வருக்கம்

## ர

**இரவு பகல் மாற்றவல்லார் என்ருலும் கொன்றுண்**
**கரவுடையா ராயிற் கடை !**

இரவு — இராக்காலத்தையும், பகல்—பகற் காலத்தையும், மாற்ற — ஒன்றை மற்ருென்ருகச் செய்யும், வல்லார் என்ருலும் — வல்லமையை உடையவராயினும், கொன்று — ஒருயிரைக் கொலை செய்து, உண் — அதன் புலாலைப் புசிக்கும், கரவு — வஞ்சகத்தை, உடையராயின்— உடையவர்களாயிருப்பாராளுல், கடை — அவர்கள் இழிந்தோர்களேயாவர்.

எல்லாசித்திகளும் கை வந்த ஞானிகளாயினும், கொலேத் தொழிலும், புலால் அருந்தலும் உடையவர் களாயின் அவர்கள் அஞ்ஞானிகளேப் பார்க்கிலும் இழிந் தாராவார் என்பதாம். 164

## ரா

இராச பயம் தெய்வபயம் என்னும் இரண்டும்
வராவுயிர் கொன் றுண்ணுதார் மாட்டு !

இராசபயம் — அரசர்களால் உண்டாகும் அச்சமும், தெய்வபயம் — சிறு தெய்வங்களால் உண்டாகும் அச்சமும், என்னும் — என்று சொல்லப்படுகிற, இரண்டும் —இ ருவகை அச்சங்களும், உயிர்-ஓர் உயிரையும், கொன்று —கொலே செய்து, உண்ணுதார் மாட்டு — அதன் மாமி சத்தைப் புசியாதவரிடத்து, வரா — உண்டாகாது.

கொலேத் தொழிலேயும், புலால் உண்ணலேயும் நீக்கின வர்களுக்கு எவ்வித அச்சமும் இல்லே என்பதாம். 165

## ரி

இரியா மனமுடையார்க் கெய்தாததில்லே
அறியார் உலகி னகத்து !

அரி — கடலால், ஆர்-சூழப்பட்ட, அகத்து — பூவுலகத் தினிடத்து, இரியா— சேதமடையாத, மனம் உடையார்க்கு — மனத்தினே உடைய நல்லோர்க்கு, எய்தாதது — கிடைத் தற்கரிய பொருள், இல்லே— யாதென்றும் இல்லே.

திடசித்தமுடைய நல்லோருக்குக் கிடைத்தற்கு அரிய பொருள் யாதொன்றும் இல்லே என்பதாம். 166

## ரீ

இரீங் கோட்டு வேழ நிகர் ஏந்திழையார்த் தாழ்வார்
சரீரம் பொறையாம் தரைக்கு !

இரு - இரண்டாகிய, ஈர்ங்கோட்டு — குளிர்ந்த கொம்புகளையுடைய, வேழம் - யானையை, நிகர் - ஒப்பாகிய ஏந்திழையார் - பெண்களைத் தலைமையாக்கி, தாழ்வார் - தாம் அவர்க்குத் தாழ்ந்து ஒழுகும் ஆடவருடைய. சரீரம் - உடல்கள், தரைக்கு - பூமிக்கு, பொறையாம் - பாரமாகும்.

பெண்களுக்குப் பயந்தவராய் அவருக்குக் கீழ்ப் பட்டொழுகும் மனிதர்கள் பூமிக்குப் பெரும் பாரமா வார் என்பதாம். **167**

ரு

உருவும் அருவும் ஒரு பொருட்கே ஓதார்
மருவும் உணர்ச்சி மயல் !

உருவும் - சகுணவடிவும், அருவும் - நிர்க்குணத்தன்மை யும், ஒரு பொருட்கே - இறைவன் ஒருவனுக்கே உண்டென்று, ஓதார் - சொல்லாதவர்கள், மருவும் - அடைந்துள்ள, உணர்ச்சி - ஞானமானது, மயல் - மயக்க முடையதாம்.

இறைவன் ஒருவனே சகளவடிவத்தையும், நிட்கள வடிவத்தையும், ஒழுங்கு உடையான் என்று உணராத வரது ஞானம். அஞ்ஞானமாகும் என்பதாம். **168**

ரூ

உரூஉக் கொடுவாளால் ஓச்சினரோய்ந் தொல்கி
வெருஉப் பணியநிற்கை மேல் !

உரூஉ — உறையினின்றும் உருவிக்கொண்டு, கொடு - வளைவு பொருந்திய, வாளால் - வாளாயுதத்தினால், ஓச்சினர் - வீசிச் சரீரத்தை வெட்டப் புகுந்த வீரர்களும், ஓய்ந்து - கைசோர்ந்து, ஒல்கி — மனம் நாணி, வெருஉ — அச்சத்தால் வாய் வெருவி, பணிய - வணங்கும்படி, நிற்கை- [தோற்றமாத்திரத்தில் உருவமாயிருக்கிற] சொரூப சித்தியை ஒருவனடைந்து நிற்பது, மேல் — உயர்ந்த நிலையாம்.

வாளாயுதத்தால் வெட்டிய போதும் பலகணி வழியாய் ஒழுகிய வெயில்போல் சரீரம் நிலே பெறுவதாகிய அருள் மேனியை அடைவதே ஒருவனுக்கு உயர்ந்த நிலேயாகும் என்பதாம். **169**

## ரெ

**இரென்றிருமென் றப்பால் இருங்களெனத் செய்யும்**
**சரென்று பறியுந் தனம் !**

சர்என்று - பிற்காலத்தில் வெகுவிரைவாக, பறியும்-அழிந்து போந்தன்மையுடைய, தனம் - செல்வமானது ஒருவனே அடையுமாயின், இரு என்று - முன்னே ஒரு மரியாதையும் பெருதவனுக்கு யாவரும் இரு என்று கூறும் மரியாதையை உண்டு பண்ணி, இரும் என்று - இரும் என்பதாகக் கூறும் மரியாதையைப் பின்பு உண்டு பண்ணி, அப்பால் - அதன் பின்பு, இருங்கள் என - இருங்கள் என்று கூறும் மரியாதையை, செய்யும் - உண்டு பண்ணும்.

ஒரு கணத்தில் அழியுந்தன்மையுடைய செல்வமானது படிப்படியாய் ஒருவனுக்கு மரியாதையை உண்டு பண்ணும் என்பதாம். **170**

## ரே

**இரேணுகைசேய் அன்னுன் இத்தலத்தில் தோன்றில்**
**நரேசரஞ்சிச் செய்வார் நலம் !**

இரேணுகை—இரேணுகாதேவியினது, சேய்—புத்திரணுகிய பரசுராமனே, அன்னுன்—ஒத்தவணுகிய ஒரு தவசி, இத்தலத்தில்—இப்பூவுலகத்தின் கண், தோன்றில்—வெளிப்படுவாணுயின், நரேசர்—மக்களுக்கிறைவராகிய சகல அரசர்களும், அஞ்சி—அத்தவசிக்கு அஞ்சி, நலம்—நன்மைகளே, செய்வார்—உலகத்திற்குச் செய்வார்கள்.

பேரரசர்களேயும் அடக்கவல்ல ஒரு தவசி உலகத்தின் கண் விளங்குவாணுயின் சகல அரசர்களும் பயந்து நன்மையைக் கவனித்து நடப்பார்கள் என்பதாம். **171**

## ரை

**இரைக்கே இரவுபகல் எய்த்தலைவார்க் கில்லை**
**வரைக்கே நிகராம் மனம் !**

இரைக்கே—வயிற்றுக்கு இரை தேடும் பொருட்டு, இரவு பகல்—இரவும் பகலும், எய்த்து—இளைப்புற்று அலைவார்க்கு—உழல்பவருக்கு, வரைக்கே- மலைக்கே, நிகராம்—ஒப்பாகிய, மனம்—திடசித்தம், இல்லை—இராது,

தேகத்தைப் பாதுகாத்தற் பொருட்டு நாடோறும் வயிற்றுக்கே இரைதேடி உழல்பவருக்கு மனவுறுதி உண்டாகாதென்பதாம். 172

## ரொ

**உரொக்கப் பொருளும் உடன்வாரா தென்றோர்ந்(து)**
**இரக்கமுடன் ஈதல் இசை !**

உரொக்கப் பொருள்—கைவசத்திலுள்ள செல்வமும், உடன்வாராது என்று—உடலைவிட்டு உயிர் நீங்கும்போது நம்மோடுகூடவரமாட்டாதென்று, ஓர்ந்து—நன்குணர்ந்து, இரக்கமுடன்—கருணையோடு, ஈதல்—வறியவருக்குக் கொடுத்தல், இசை—புகழாம்

சம்பாதித்து வைத்திருக்கிற பொருளும் நாம் இறந்த போது உடன்வாராதென்று நன்கு உணர்ந்து தாமுள்ள போதே வறியவருக்குத் தயவுடன் கொடுப்பாராகில், கொடுத்தவருக்கு இப்பிறப்பில் கீர்த்தியும் மறுபிறப்பில் புண்ணியமும் உண்டாகும் என்பதாம். 173

## ரோ

**உரோமசனே போல்வார் உலகில் உதிக்கில்**
**சரோசன்மறைக் குண்டாம் தருக்கு !**

உரோமசனே—உராமசமுனிவரையே, போல்வார்—போன்ற தவசிகள், உலகில்—இவ்வுலகத்தில், உதிக்கில்—

பிறப்பாராயின், சரோசன்—பிரமாவினுற் சொல்லப்பட்ட, மறைக்கு — வேதநெறிகளுக்கு, தருக்கு—களிப்பானது, உண்டாம்—உண்டாகும்.

திருவருள் பெற்ற தவசிகள் பூவுலகத்தில் உதிப்பாராயின் வேதநெறிகளுக்குப் பொலிவுண்டாம் என்பதாம். **174**

## ரௌ

**இரௌரவத்தில் தாழார் இரவி முதலோர்ப்**
**பரவறுவர் தோய்வார் பரம் !**

இரவிமுதலோர்—சூரியன் முதலிய தெய்வங்களை, பரவு—வழிபடுகின்ற, அறுவர்—சௌரவர் ஆகிய அறுவகைச் சமயத்தோரும், ரௌரவத்தில்-ரௌரவாதி நரகங்களில், தாழார்—வீழார்கள், பரம்-மேலான பரமுத்தியையே, தோய்வார்—அடைவார்கள்.

சூரியன் முதலிய தெய்வங்களை வழிபடும் அறுவகைச் சமயிகளும் நற்கதியடைவார் என்பதாம். **175**

## லகர வருக்கம்

## ல

**இலகும் பரிதிமதி எங்கும் நிறைந்தும்**
**கலகம்விளைக் கும்பெருமான் கண் !**

இலகும்—பிரகாசிக்கின்ற, பரிதிமதி-சூரிய சந்திரர் என்னும் இருசுடர்களும், எங்கும்-எல்லாச் சமயங்களிலும், நிறைந்தும்-பொருந்தியிருந்தும், கலகம்-மதங்களில் ஒன்றுக்கொன்று ஒவ்வாதமாறுபாட்டை உயிர்களின் பக்குவ நிலைக்கேற்ப, விளைக்கும்-உண்டுபண்ணுகின்ற, பெருமான்-இறைவனுடைய, கண்-இரண்டு கண்களாகும்,

எங்கும் நிறைந்த கடவுளுக்குச் சூரியனும் சந்திரனும், இரண்டு கண்களாகி விளங்கும் என்பதாம், **176**

## லா

**இலாபம் நினைத்தளவில் இன்புறிற்கைப் பொன்போம்**
**அலாததெண்ணிச் சோம்புறலும் ஆங்கு !**

இலாபம்-பின்வரும் இலாபத்தை, நினைத்து-எண்ணி, அளவில்-எல்லையற்ற, இன்புஉறில்—இன்பத்தை ஒருவர் அடைந்தால், கைப்பொன்-அவர் கையிலுள்ள பொருளானது, போம்-நட்டமாரும், அலாதது—பின் வருகின்ற நட்டத்தை, எண்ணி-நினைத்து சோம்புறலும்-சோம்பல் அடைந்திருந்தாலும், ஆங்கு—கையிலுள்ள பொருளானது நட்டமாகும்.

பின்வரும் பயனை நினைத்துப் பெருங்களிப்பு அடைந்தாலும், பின்வரும் நட்டத்தை நினைத்து முயற்சியற்று இருந்தாலும் கேடுண்டாகும் என்பதாகும். **177**

## லி

**இலிங்கம் பொதுவென்னில் எள்ளும் மடமை**
**மலிந்தவரும் கொள்வார் மனத்து**

இலிங்கம்-சிலலிங்கமானது, பொது-சகலமதங்களுக்கும் பொதுவானது, எண்ணில்-என்று மெய்யுணர்ந்தோர்கள் கூறுவாராயின், எள்ளும்-அதற்கு உடன்படாமல் இகழும், மடமை-அறிவின்மையில், மலிந்தவரும்-மிகுந்துள்ளவரும் மனத்து-தங்கள் உள்ளத்தில், கொள்வார்-அவ்விலிங்கத்தையே தியானிப்பர்.

சிவலிங்கமானது யாவருக்கும் பொதுவானது என்றாலும், உடன்படாது இகழும் சாமானியரும் அவ்விலிங்கத்தையேதான் மனதில் தியானிப்பார் என்பதாம். **178**

## லீ

**இலீலைக் கிசையா இளம்பருவத் தாள்கண்**
**சிலீமுகமும் நோயே செயும் !**

இலீலக்கு-புணர்ச்சிக்கு, இசையா-பொருத்தமில்லாத, இளம்பருவத்தாள் - பேதைப்பருவப் பெண்ணினுடைய, கண்-கண்களாகிய, சிலீமுகமும்-பாணங்களும், நோயே-காமநோயையே, செயும்-ஆடவர்களுக்கு உண்டுபண்ணும்,

பேதைப்பருவ மகளிரது கண்ணின் பார்வையும், காம நோயை விளைக்கும் என்பதாம். 179

## லு

உலுத்தரெதிர் பல்காற்சென் றெல்கிநின்று கையேற்(று)
அலுத்தல் அணங்கில் அணங்கு !

உலுத்தர்-உலோபிகளுக்கு, எதிர்-முன்னே, பல்கால்-பலமுறையும், சென்று-போய், ஒல்கி-நாணம் இழந்து, நின்று-நின்று கொண்டு, கை-தமது கைகளை ஏந்தி, ஏற்று-யாசித்து, அலுத்தல் - சலிப்படைதல், அணங்கில்-யாசிப்பவர்களுக்குள்ள துன்பங்களுக்குள், அணங்கு-பெருந்துன்பமாகும்.

உலோபிகளிடத்தில் பலமுறையும் போய் இரந்து நிற்பது யாசகருக்குப் பெருந்துன்பமாகும் என்பதாம் 180

## லூ

உலூகம் அனையாருக் கொண்பரிதி யன்ன
நலூகம் உணர்த்தல் நவை

உலூகம் — கூகைப்பட்சியை, அனையாருக்கு - ஒத்த மூடர்களுக்கு, ஒண்—பிரகாசத்தையுடைய, பரிதியன்ன— சூரியனைப் போன்ற, நல் ஊகம் — நல்லறிவை உணர்த்தல் - போதித்தல், நவை - குற்றமாகும்,

மூடர்களுக்கு நற்புத்தி கற்பித்தல் குற்றமாகும். 181

## லெ

இலென்ற மைந்தார் நஞ்சுண் டிறந்தாரும் உண்டே
கலென்றி ரைந்த நீர் வைப்பின் கண் !

இல்என்று - தமக்கு மனைவியர்களாக, அமைந்தார் – பொருந்திய மாதர்களால் இடப்பட்ட. நஞ்சு – விடத்தை, உண்டு – புசித்து, இறந்தாரும் - மரணமடைந்த புருடர் களும், கல்என்றிரைந்த—கல் என்னும் சத்தத்தையுடைய, நீர் கடலாற் சூழப்பட்ட, வைப்பின் கண் – பூமியினிடத்து உண்டு - சிலர் உண்டு,

சொந்தமனைவியர்களால் இடப்பட்ட விடத்தால் இறந்த புருடரும் உலகிற் சிலர் உண்டு என்பதாம். **182**

## லே

**இலேசச் சுகம் விழைந்திட் டெண்ணிலுடற் றாங்கும்**
**கிலேசம் தவத்தாற் கெடும் !**

இலேசச் சுகம் - அற்பசுகங்களை. விழைந்திட்டு - விரும்பி, எண்ணில் - அளவிறந்ற, உடல் - சரீரங்களை, தாங்கும் - எடுத்துழலும், கிலேசம் - துன்பமானது. தவத்தால் - தாம் செய்யும் தவத்தினால், கெடும் - ஒருவருக்குக் கெட்டுவிடும்.

அற்பசுகங்களை விரும்பி அளவிறந்த சரீரங்களை எடுத்து உழலும் பெருந்துன்பமானது ஒருவருக்குத் தவத்தாற் கெடும் என்பதாம். **183**

## லை

**இலையிற் பொதிதரும் நீறேய்ந்த சமயத்**
**தலை நிற்பார்க் கியாவுஞ் சமம் !**

இலையில் - பன்னீரிலையின்கண் தைத்து, பொதிதரு- அவ்இலையால் மூடப்பட்டுள்ள,நீறு - விபூதிப் பிரசாதத்தை ஏய்ந்த - தன்னிடத்துடைய, சமயத்தலை - கௌமார சமயத்தின் கண், நிற்பார்க்கு - நிலை பெற்ற கௌமாரருக்கு, யாவும் - சகல சமயங்களும், சமம் - ஒன்றாகும்

இலைவிபூதியைப் பிரசாதமாக உடையகௌமாரருக்குச் சகல சமயங்களும் ஒன்றாகவே விளங்கும் என்பதாம். **184**

## லொ

உலொன்றி இறந்தோர் உயர்ந்தோரைப் போற்றும்
சொலொஞ்சியதஞ் ஞானத் தொடர்பு !

உல்—கழுமரத்தின் கண், ஒன்றி - ஏறியிருந்து, இறந்தார் - உயிரை விட்ட சமணர்கள், உயர்ந்தோரை -ஞானத்தால் உயர்ந்த பெரியோர்களை, போற்றும் - துதிப்பதாகிய, சொல் - இனிய வார்த்தையைச் சொல்லுவதற்கு' ஒஞ்சியது – நாணமுற்று வருந்தியது, அஞ்ஞானத் தொடர்பு - அஞ்ஞான சம்பந்தமாகும்.

தம்மினும் சிறந்த பெரியோர்களை வணங்காமல் வீணே கழு ஏறிய சமணர்கள் இறந்தது அறிவீனமாகும் என்பதாம். **185**

## லோ

உலோகத்தி லுள்ள நெறி ஒக்கநன்றே யாகும்
கொலோர்தொழில்தீ தென்சொற் கொளில்,

கொல்-கொல்லுதலாகிய, ஓர்தொழில்-ஒரு தொழிலை, தீது-மிகவும் தீமையுடையது, என்-என்று கூறும், சொல்-அறிவுடையோர் வார்த்தையை, கொளில்-உறுதியாகக் கொள்ளுமாயின், உலோகத்தில்-உலகத்தின் கண்ணே, உள்ள-நிலைபெற்றிருக்கிற நெறி-சமயங்கள், ஒக்க-முழுமையும், நன்றேயாகும்-நல்ல சமயங்களேயாம்.

கொலைத் தொழில் ஒன்று மாத்திரம் இல்லையாயின் எச்சமயங்களும் நல்ல சமயங்களேயாகும் என்பதாம். **186**

## லௌ

இலௌகீக வைதீகத் தெந்நிலைக்கும் என்றும்
உலவாத மெய்யே உரம்!

இலௌகிகம் - உலகநெறியின் கண்ணும், வைதீகத்து-வைதீக நெறியின் கண்ணுமுள்ள, எந்நிலைக்கும்-எவ்வகைப் பட்ட நிலைகளுக்கும், என்றும்-எக்காலத்தும், உலவாத-கெடாத, மெய்யே-சத்தியம் ஒன்றே, உரம்-வலிமையாகும்.

இலௌகிக நெறிகளுக்கும் வைதீக நெறிகளுக்கும் ஆதார மாயுள்ளது சத்தியமேயாகும் எள்பதாம். **187**

## வகர வருக்கம்

### வ

**வழுவை முகத்தினதா வான்பொருளை நாடித்**
**தொழுமவருக் கில்லை துயர் !**

வான்-மேலாகிய, பொருளை-பரம்பொருளை, வழுவை முகத்தினதா-யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளாகக் கண்டு, நாடி-மனத்தால் தியானித்து, தொழும்அவருக்கு-வணங்குகிறவர்களுக்கு, துயர் - துன்பமானது, இல்லை - உண்டாகாது.

பரம்பொருளை விநாயகக் கடவுளாக உள்ளபடி கண்டு வழிபடும் அன்பர்களுக்குத் துன்பம் உண்டாகாதென்பதாம். **188**

### வா

**வான்முதலாம் பூதமைந்தும் மற்றையவுந் தானுன**
**கோன்முதல்வன் என்பான் குரு!**

வான்முதலாம்-ஆகாயம் முதலாகிய, பூதம் ஐந்தும்-பஞ்சபூதங்களும், மற்றையவும் - மற்றுஞ் சொல்வார் சொல்லும் எல்லாப் பொருள்களும், தானுன-தானே ஆகியுள்ள, கோன்-கடவுளே, முதல்வன் என்பான்-முதற்கடவுள் என்று சொல்பவனே, குரு-ஆசிரியனுவான்.

எல்லாம் தானுய் நிறைந்துள்ள கடவுளே உண்மைப் பொருள் என்று உணர்த்துபவனே சற்குரு ஆவான் என்பான் என்பதாம். **189**

### வி

**வித்தைக் கடல்கடந்து மெய்த்தவத்தைப் பற்றியவர்**
**சித்தைப் பழிப்புச் செயார் !**

வித்தை-கல்வி என்னும், கடல்-சமுத்திரத்தை, கடந்து-தாண்டி, மெய்த்தவத்தை-சத்தியத் தவத்தை, பற்றியவர்-உறுதியாகப் பிடித்தவர், சித்தை-அருட்சித்தியை, பழிப்புச் செய்யார்-நிந்தியார்கள்.

கல்விக் கடலைக் கடந்த சத்தியத் தவசிகள் சித்திகளை நிந்தியார் என்பதாம். 190

## வீ

**வீரத் தவம்பழுத்தோன் மேதினிக்குச் செய்வதெண்ணில்**
**ஆரத் தகாதனநீத் தல்!**

வீரத்தவம் பழுத்தோன்-உறுதியான தவமுதிர்ச்சி உடைய ஒரு தவசி. மேதினிக்கு-உலகத்திற்கு, செய்வது-செய்யததக்க உபகாரம், எண்ணில்-யாது என்று ஆராயுமிடத்து, ஆரத்தகாதன-புசிக்கத்தகாத புலாலுணவை, நீத்தல்-தடுத்தலாம்.

உத்தமத் தவசி உலகத்துக்குச் செய்யும் உபகாரம் புசிக்கத் தகாதவைகளைப் புசிக்க ஒட்டாமல், யாவரையும் தடுத்தலாம் என்பதாம். 191

## வு

**உவுருக்கோற் றோற்பறைபோன் றூது முலைப்பேய்**
**தவுமா செயலும் தமிழ் !**

உ-உ என்னும் எழுத்தின், உரு-வடிவத்தையுடைய, கோல்-கோலால் அடிபடுகின்ற, தோல்-தோலால் மூடிய, பறை - ஒரு கண்ணையுடைய பறைகளை, போன்று-ஒத்து, ஊதும்-பருத்த, முலை-தனங்களையுடைய, பேய்-பேயானது, தவமா-கெடும்படி, செயலும்-செய்ததும், தமிழ்-தமிழ் மொழியாகும்.

கோரரூபத்தையுடை பேயைக் கெடும்படி செய்ததும் தமிழ் மொழியாகும் என்பதாம். 192

## ஊ

**உஊழ்நலத்தார் இன்றெனினும் ஓர்ந்து செயிற்பின்**
**இஊழ்வருமென் றேலுமவ ரே!**

உ-முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயனுகிய, ஊழ் நலத்தார்-நல்ல ஊழையுடையவர் யாவர் என்னில், இன்று எனினும்-பூர்வத்தில் செய்த நல்வினை நமக்கு இல்லாமற் போனாலும் போகட்டும், ஓர்ந்து-இந்தச் சென்மத்தில் நமக்கு ஏற்றதான நன்முயற்சி யாது என்று நன்குஆராய்ந்து, செயின்-அதற்குத் தக்கபடி முயற்சிப்போமாகில், பின்-வருகிற சென்மத்தில், இ-இந்நன் முயற்சியே,ஊழ்-நல்ல ஊழாகி, வரும் என்று-தப்பாது வரும் என்று துணிவு கொண்டு, ஏலும் அவரே-நன்முயற்சியில் நிலைபெற்றிருக்கும் உத்தமர்களேயன்றி மற்றையவரல்லர்.

முன்னியநல்லூழ் நமக்கு இன்றாயினும் இம்மையிற் செய்த நன் முயற்சியே மறுமைக்கு நல்ல ஊழாகி வருமல்லவா என்று துணிந்து நன்மையில் முயற்சிப்பவரே முன்னைய நல்ஊழ் உடைய வராவார் என்பதாம். **193**

## வெ

**வெள்ளைக் கலைமகளும் விண்டுமனையும் புணர் சீர்**
**கொள்ளைத் தவத்தோர் கொளல்!**

வெள்ளை - வெண்மை நிறத்தையுடைய, கலைமகளும் - சரசுவதியும், விண்டு - விட்டுணு வினுடைய, மனையும் - மனைவியாகிய இலக்குமியும், புணர் - பொருந்துவதால் உண்டாகும், சீர் - பெருஞ்சிறப்பானது. கொள்ளை - மிகுதியாகிய, தவத்தோர் - மெய்த்தவம் உடையோரால் பெறப் படுவதாம்.

கல்விச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும், ஒருங்கு அடையும் பெருஞ்சிறப்பானது மேலாகிய தவசிகளுக்கே உரியதாகும் என்பதாம். **194**

## வே

**வேனன் கலந்த விலக்கை விதியாக் கொண்(டு)**
**ஈனமுற்ற பேரெண்ணி லார் !**

வேனன் - வேனன் என்னும் அசுரனானவன், கலந்த— நூதனமாகக் கற்பித்து வேதத்திற் சேர்த்த, விலக்கை - செய்யத்தகாத விதிகளை, விதியா – செய்யத்தகும் விதிகளாக, கொண்டு - ஒட்டிச் செய்து, ஈனம் உற்றபேர் - பெரும் பழியை அடைந்தவர்கள் எண்ணிலார், -இவ்வுலகத்தில் அநேகர்.

வேனன் என்னும் அசுரன் கற்பித்து, வேதத்தில் சேர்த்த யாகக் கொலையை வேதவிதி என்று துணிந்து செய்து ஈனமடைந்தவர் இவ்வுலகத்தில் அநேகர் என்பதாம். 195

## வை

**வைவேல் வழுதியன்னார் வாஞ்சை மறவாளே**
**மைவேலைத் தானை மகள் !**

மை - கருநிறத்தையுடைய, வேலை - சமுத்திரத்தை; தானை - உடையாக உடுத்த, மகள் - பூமி தேவியானவள்; வை - கூர்மைபொருந்திய; வேல் - வேலாயுதத்தையுடைய, வழுதி -உச்கிர பாண்டியனை, அன்னார் - ஒத்த அரசர்கள் வாஞ்சை - பேரன்பினால் தனக்கு செய்த பேருதவியை; மறவாளே - ஒரு காலும் மறவாதவளேயாவாள்.

உக்கிரபாண்டியனை ஒத்த அரசர்களது பேரன்பையே பூமிதேவி எந்நாளும் நினைத்துக் கொண்டிருப்பாள் என்பதாம் 196

## வொ

**ஒவொரு சமயத்தும் உற்சாகங் கொண்டு**
**தெவொருங் கொழித்தார் சிலர் !**

ஒவ்வொரு சமயத்தும்—ஒவ்வொரு சமயத்தின் கண்ணும், சிலர்—சில மெய்யடியார்கள், உற்சாகம்—தைரியத்தையே, கொண்டு — துணைக்கருவியாகக் கொண்டு, தெவு — புறச் சமயப்பகையை, ஒருங்கு — முற்றும், ஒழித்தார் — நீக்கித் தம்மதத்தை நிறுத்தினர்.

ஒவ்வொரு சமயத்துமுள்ள சில மெய்யடியார்கள் தமது தைரியத்தினால் பிறமதங்களைக் களைந்து உத்தம மதங்களை நிலைநிறுத்தினர் என்பதாம். 197

## வோ

**ஓவோடு மவ்வொற் றுறுஞ் சொல்லூ டுள்ள பயன்**
**ஆவோனே என்றுமழி யான் !**

ஓவோடு — ஓ என்னும் எழுத்துடனே. மவ்ஒற்று — மகர மெய்யானது, உறும் — பொருந்திய ஓம் என்னும், சொல்லூடு — பிரணவ மந்திரத்தின் கண், உள்ள — நிலை பெற்றிருக்கின்ற, பயன் ஆவோனே—பொருளாயுள்ளவன், எவனோ அந்த இறைவனே, என்றும் — எக்காலத்தும், அழியான் — அழியாதவனாவான்.

பிரணவம் என்னும் மந்திரப் பொருளாவான் எவனோ அவனே அழிவற்ற மெய்க்கடவுள் என்பதாம். 198

## வௌ

**வௌவுமவர்க் கெல்லாம் வரமளிக்க வல்லானே**
**எவ்வுலகுங் காக்கும் இறை !**

வௌவும் அவர்க்கெல்லாம் — தன்னை வழிபடும் மெய்த் தொண்டர்களுக்கெல்லாம், வரம் — அவரவர் வேண்டிய வரங்களை, அளிக்கவல்லானே — கொடுத்தருள வல்லவன் யாவனெனில், எவ்வுலகும் — எல்லா உலகங்களையும், காக்கும்—காப்பாற்றவல்ல, இறை— தலைமைப் பரனாவான்.

சகல லோக நாயகனாகிய இறைவனே தன்னை விரும்பிய மெய்த் தொண்டர்களுக்கு வேண்டிய வரங்களைத் தரவல்லான் என்பதாம். 199

## ழகர வருக்கம்

### ழ

**அழகில் அழகியதீண் டாராய்த் தறியில்**
**கழகம் புகழ்தரு செங் கை !**

ஈண்டு — இவ்வுலகத்தின் கண், அழகில் — அழகு டைய பல பொருள்களுள்ளும், அழகியது — மிக்க அழகு டையது, ஆராய்ந்தறியில் — எது என்று ஆலோசித்துச் செல்லுமிடத்து, கழகம் — நிறைந்த கல்விமான்களால், புகழ்தரு — புகழப்படுகின்ற கொடையையும், செம் — சிவந்த நிறத்தையுமுடைய, கை—கையே என்று சொல்லப் படும்.

பெரும்புலவர்களாற் புகழப்படுகிற கொடையை உடையவனது கையே அழகுடையது என்பதாம். **200**

### ழா

**அழாஅது நல்கும் அறிவாளன் செல்வம்**
**வழாஅது மன்னும் வளர்ந்து!**

அழாஅது — சிறிதும் வருந்தாமல், நல்கும் — உத்தமர் களுக்குக் கொடுக்கும், அறிவாளன் — நல்லறிவை உடைய வனது, செல்வம் — செல்வமானது, வளர்ந்து — மேலும் மேலும் பெருகி, வழாஅது — சற்றும் அவனைப் பிரியாமல், மன்னும் — நிலை பெற்றிருக்கும்.

நல்லோருக்கு மனம் மகிழ்ந்து கொடுக்கும் நல்லறி வாளனது செல்வம், பெருக்கத்தை அடைந்து நிலைபெத் திருக்கும் என்பதாம். **201**

### ழி

**இழிவந்த சொற்ருெருவர்க் கின்னல் விளையார்**
**அழிவின்றி வாழும் அவர் !**

அழிவின்றி — யாதொரு கெடுதியுமில்லாமல்; வாழும் அவர்—வாழவேண்டும் என்னும் எண்ணமுடையவர், இழி வந்த — அவமான வார்த்தைகளை, சொற்று — பேசி, ஒருவர்க்கு — ஒருவருக்கு, இன்னல் — துன்பத்தை விளையார் — உண்டுபண்ணார்.

தமக்கு ஒரு கெடுதியும் இல்லாமல் வாழ வேண்டுவோர் பிறரை நிந்தித்துத் துன்பஞ்செய்யார் என்பதாம். **202**

ழீ

**இழீனந் தொழிலாம் இலங்கிழையார் தம்மாற்**
**கெழீஇயார் நோய்பல் கிரி !**

இழு — யாவரையும் பலவந்தஞ் செய்து இழுக்கும், ஈனம் — இழிதொழிலையே, தொழிலாம் — தமது தொழிலாக உடைய, இலங்கு — துலக்கமாகிய, இழையார் தம்மால்—ஆபரணங்களை அணிந்த பொது மாதர்களிடத்து கெழீஇயார் — புணர்ச்சி இன்பம் அநுபவிக்கும் காமுகர்க்கு, நோய் — அப்புணர்ச்சியாலுண்டாகும் பிணியானது பல்கிரி — பலமலைகளுக்கு ஒப்பாகும்.

ஆடவர்களை வலிந்து புணரும் பரத்தையரைக் கூடிச் சுகித்த தூர்த்தர்கள் பெரும் பிணியால் மிகவும் வருந்திச் கெடுவார் என்பதாம். **203**

ழு

**இழுக்கஞ்சி மெய்ப்புகழ்ச்சி இச்சியார்க் கில்லை**
**ஒழுக்கம் தலைக்கொள் உரம் !**

இழுக்கு — அற்பர்களால் உண்டாகும் பழிக்கு, அஞ்சி — பயந்து, மெய்ப்புகழ்ச்சி — அழியாத கீர்த்தியை, இச்சியார்க்கு — பெற விருப்பமில்லாதவருக்கு, ஒழுக்கம் — தமக்குரிய நல்ஒழுக்கத்தை, தலை — சிரசினிடத்து, கொள் — தாங்கிக் கொள்ளும், உரம் — வலிமையானது, இல்லை — இல்லையாம்.

அற்பர்களால் உண்டாகும் பழிச்சொல்லுக்குப் பயந்து மெய்ப்புகழை விரும்பாதவருக்கு நல்ஒழுக்கம் கிடையாது என்பதாகும். 204

ழு

**இழூஉ விணைப்பேய் இடர்செயினும் நீதி**
**வழூவுக் கெடார்நன் மகர் !**

விணைப்பேய் — பழவிணை என்னும் பைசாசமானது இழூஉ — இழுத்து, இடர் செயினும் — துன்பஞ் செய்தாலும், நன்மகர் — நல்லோர்கள், நீதி — நடுவு நிலைமையினின்றும், வழூஉ — வழுவி, கெடார் — கெடமாட்டார்கள்.

பழவிணைப் பேயானது மிகவும் மலைத்துத் துன்பப் படுத்தினாலும், நன்மக்கள் நியாயம் தவறிக் கெடமாட்டார்கள் என்பதாகும். 205

ஓழ

**எழென்றும் இருந்திகழ்வாட் கின்புறுவான் தன்மை**
**பழென்றிலவைக் கெஞ்சும் படி !**

எழுஎன்றும் — எழுந்திரு என்று கூறிய பின்னும் எழுந்திராமல், இருந்து — இருந்து கொண்டே, இகழ்வாட்கு — எதிர்த்து நிந்திக்கும் மனைவியின் பொருட்டு, இன்புறுவான் மகிழ்ச்சியடையும் ஒருவன், தன்னை — தனது வார்த்தைக்கு- இசையும்படு அவளைக் கெஞ்சும் தன்மையானது, இலவை — பழுக்கும் தன்மையில்லாத இலவமரத்தை நோக்கி, பழு — ஓ ! இலவே நீ என்வார்த்தைக்கு இசைந்து பழம் பழுக்க வேண்டும், என்று — என்பதாக நல்வார்த்தை சொல்லிக் கெஞ்சும் தன்மையை ஒக்கும் !

தனது வார்த்தைக்குச் சற்றும் இசையாது இகழும் மனைவியைக் கணவனுவன் தனது வார்த்தைக்கு இசைந்து ஒழுகும்படிக் கெஞ்சுவது, பழந்தருந்தன்மை இல்லாத இலவமரத்தைப் பழம்தரும் பொருட்டுக்குக் கெஞ்சுதல் போலும் என்பதாம். 206

## ழே

**ஏழேழ்வர் தாமும் இருந்திரைநீர்ப் பொய்கைநடு**
**வீழேதஞ் செய்த முன்னூல் மெய் !**

ஏழ்ஏழ்வர்தாமும் — கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரும், இரும் — பெரிய, திரை — அலைகளை வீசும், நீர் — நீரையுடைய, பொய்கை — பொற்றாமரைத் தடத்தின், நடு மத்தியில், வீழ் — விழுந்து அழுந்தும்படி, ஏதம் — துன்பத்தை, செய்த—உண்டாக்கிய, முன்னூல் — திருக்குறள் என்னும் தமிழ்மறை, மெய் — பொய்யாமொழி ஆகும்,

நக்கீரர் முதலிய சங்கப்புலவர்களை வெற்றிகொண்ட திருக்குறள் என்னும் முதல் நூலே மெய்ந் நூல் ஆகும். **207**

## ழை

**அழைக்குந் தொழும்பர் அவாவளிக்கும் அம்மான்**
**மழைக்குங் கருணைநல்கு வான் !**

அழைக்கும் — தன்னைச் சகள வடிவாகத் தியானித்து அழைக்கிற, தொழும்பர் — மெய்த்தொண்டர்களுக்கு எதிர் வந்து, அவா — அவரவர் விரும்பியவரங்களை, அளிக்கும் — கொடுத்தருளுகிற, அம்மான் — இறைவனே, மழைக்கும் — மேகத்துக்கும், கருணை — பயனை நினையாது பெய்கிற அருளை, நல்குவான் — கொடுத்தருளுவான்.

மெய்யன்பர்கட்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளும் இறைவனே மேகத்துக்கும் கைம்மாறு கருதாது பெய்யும் கருணையை உண்டாக்குவான் என்பதாம். **208**

## ழொ

**உழொரு தொழிலேமிக் குத்தமமென் றோர்ந்தார்**
**அழொலி மிடிநோ யறும் !**

ஒரு — சமானமில்லாத, உழுதொழிலே — உழுது பயிர் செய்கின்ற தொழிலே, மிக்கு — மிகவும், உத்தமமென்று — மேன்மையுடைய தொழிலென்று, ஓர்ந்தார் — அறிந்து அத்தொழிலில் முயன்றவுடன், முன்னர் அடைந்திருந்தும், அழுஒலி — அழுகைச் சத்தத்தை உண்டாக்க வல்லதுமான, மிடி நோய் — வறுமைப் பிணியானது, அறும் — கெடும்.

உழுதுபயிர் செய்யும் பயிர்த் தொழிலின் சிறப்பை நன்கறிந்தவர் அத்தொழிலில் ஈடுபட்டவுடன் முன்னர் அவ்வறிவின்மையால் நேரிட்டிருந்த வறுமை கெடும் என்பதாம். 209

## ழோ

**ஊழோடு போரிட் டொருவன் உறுக்குமென்**
**வீழோகை பெற்றகதை மெய் !**

ஒருவன்-ஒப்பற்ற மார்க்கண்டேயரானவர், ஊழோடு-பழவினையுடன், போரிட்டு — போர் செய்து, உறுக்கும் — பயமுறுத்திக் கொண்டு வந்த, எமன் — எமனானவன், வீழ் - சிவபெருமானுடைய திருவடியால் உதைபட்டு விழும்படி செய்ததனால் உண்டாகிய, ஓகை-பேரானந்தத்தை,பெற்ற - அடைந்த, கதை — சரித்திரமானது. மெய் — உண்மை யாகும்.

ஊழ்வினையோடு போர் புரிந்து எமனையும் வென்ற மார்க்கண்டேயரது சரித்திரம் உண்மைச் சரித்திரமாகும் என்பதாம். 210

## ழௌ

**அழௌவை களிகூர ஆனைமுகன் வெள்ளிப்**
**புழமலையில் உய்த்தான் பரிந்து !**

ஆனைமுகன் — விநாயகக் கடவுளானவர், அழு — தமது சந்நிதியில் விண்ணப்பம் செய்து கொண்ட, ஔவை — ஔவையார், களிகூர — மிக மகிழும்படி, பரிந்து-கிருபையுடன் இனிய வார்த்தைகளைக் கூறி, வெள்ளிப்பழமலையில் -

அநாதியாகிய கைலையங்கிரியில் சேரும்படி, உய்த்தான் — துதிக்கரத்தால் தூக்கிவிடுத்தருளினர்.

விநாயகக் கடவுளானவர் மெய்யன்புடைய ஔவையாரை மிக மகிழ்வித்துக் கைலாயங்கிரியின் கண் செலுத்தினர் என்பதாம். 211

## ளகர வருக்கம்

### ள

இளகா மனத்தினவர்க் கெய்தாது சற்றும்
துளவாரன் செய்யும் தொழில் !

இளகா — இரக்கமில்லாத, மனத்தினவர்க்கு — நெஞ்சத்தை உடையவருக்கு, துளவாரன் — துளபமாலையை அணியும் திருமால், செய்யும் — செய்கின்ற, தொழில் — காக்கும் தொழிலானது, சற்றும் — சிறிதும், எய்தாது — உண்டாகாது.

சீவகாருணியமில்லாத சித்தத்தையுடையவரிடத்து உலோகோபகாரச் செய்கை சிறிதும் அடையாதென்பதாம் 212

### ளா

இளாவிருத மாதி இடந்தொறும்போய் மீள்சீர்
கொளாருவகைக் குண்டே குறை !

இளாவிருதமாதி — இளாவிருதம் முதலாகிய, இடந்தொறும் போய் — கண்டங்கள் தோறும் சென்று, மீள் — திரும்பத்தக்க, சீர் — திரு அருட்சித்தியை, கொள்ளார் — பெருதவருடைய, உவகைக்கு — மகிழ்ச்சிக்கு, குறை — குறைவானது, உண்டு — உளதாகும்.

சமுத்திரம் சூழ்ந்த பூமி முழுதும் சஞ்சரித்து மீள்வதற்கேற்ற சித்திகளைப் பெருதவருடைய மகிழ்ச்சிக்குக் குறைவுண்டாம் என்பதாம். 213

## ளி

**இளிபட்ட தன்மையரும் ஈசனருள் எய்தில்**
**களி முற்றும் வாழ்வடைவார் காண் !**

இளிபட்ட இழிவு பொருந்திய தன்மையரும். செய்கை உடையவரும், ஈசன் — இறைவனுடைய, அருள்— கருணையை, எய்தில் - அடைவராயின், களிமுற்றும் வாழ்வு-முற்றிய பேரின்ப வாழ்க்கையை, அடைவார் — பெறுவார் கள், காண்—நீ அறிவாயாக!

இறைவன் கருணையைப் பெறுவார்களாயின் இழிந்த வரும் போக மோட்சங்களை ஒருங்கு அடைவார் என்ப தாம். 214

## ளீ

**இளீ நிற்கியன் அஞ்சேனென் றீசனன்பிற் றோய்ந்து**
**துளீர்நுமக்கின் றுண்மைச் சுகம் !**

ஈசன் — இறைவனுடைய, அன்பில் - கருணை என்னும் கடலினிடத்து, தோய்ந்து — மூழ்கி பின்பு, உங்களை யடைந்த பழியை நோக்கி, இளீ—ஓ பழியே! நிற்கு — உனக்கு, யான்-நான், அஞ்சேன்— இனிப்பயப்படமாட் டேன், என்று—எனத் திடங்கொண்டு, துளீர் — ஆனந்தக் கூத்தாடாதவர்களே! நுமக்கு — உங்களுக்கு, உண்மைச் சுகம் — அழியாத பேரின்பச் சுகமானது, இல்லை - இல்லவே இல்லை. உண்டென்று மதியாதீர்கள்.

இறைவன் அருளை நிறையப்பெற்று உலக நிந்தையைக் கெடுத்து, ஆனந்தக் கூத்தாடாதவர்களே! உங்களுக்கு உண்மைச்சுகமில்லை, உண்டென்று மதியன்மின் என்பதாம். 215

## ளு

**உளுத்த மரமேபோன் றுள்ளுடைவார்க் கில்லை**
**கொளுத்தழல்நேர் வீரக் குணம் !**

உளுத்த — உளுப்படைந்த, மரமே போன்று-மரத்தைப் போல, உள் உடைவார்க்கு — மனத்திடங்கெட்டு விசனமுற்றவருக்கு, கொளுத்து — மூளப் பண்ணிய அழல் — நெருப்பை, நேர் — ஒப்பாகிய, வீரக் குணம்— வீரியத்தன்மை. இல்லை — உண்டாகாது.

மனோ தைரியம் கெட்டு வியாகுலத்தைப் பற்றி யவருக்கு வீரத்தன்மை உண்டகாதென்பதாம்! 216

## ளு

உளுக்கமிலார் மெய்யருட்சீர் உற்ருலுஞ் செய்யார்
கொளுஉ நலத்தைக் குவித்து!

உள் — இருதயத்தில், ஊக்கம்— நல்லுணர்ச்சி, இலார்- இல்லாதவர், மெய் — உண்மையாகிய, அருட்சீர் — திருவருட் செல்வத்தை, உற்ருலும் — பெற்ருராயினும், கொளுஉம் அறிவுடையோர் ஒப்புக் கொள்ளத்தக்க, நலத்தை — நன்மைகளை, குறித்து - நன்கு ஆராய்ந்து, செய்யார் — செய்யமாட்டார்கள் என்பதாம். 217

உள்ளத்தில் நல்லுணர்ச்சி இல்லாத சிலர் தெய்வீகத் தால் அருட்பேற்றை அடைந்தாலும் செய்யத்தக்க நன்மை களைக் கவனித்து உலகத்துக்குச் செய்யமாட்டார்கள் என்பதாம்.

## ளெ

இளெகரத்திற் றோய்ந்தாங்கும் ஈரமிலார்க் கில்லை
தளெலும் பூன் றின்ருத் தகை!

இள்—ளகர மெய்யானது, எகரத்தில் — எகர உயிரின் பின், தோய்ந்தாங்கும்— புணர்ந்தனலுண்டாகும் பதத்தின் அருத்தமாகிய எள் என்னும் அளவும், ஈரம் இலார்க்கு — சீவகருணை இல்லாதவருக்கு, தள் — தள்ளத் தக்க, எலும்பு- எலும்புகளையும், ஊன் — புலாலையும், தின்ற — புசியாத தகை — பெருந்தன்மை. இல்லை— இராது.

எள் அளவும் இரக்கமில்லாதவருக்கு என்பையும், புலாலேயும் புசியாத பெருந்தன்மை இராதென்பதாம். 218

## ளே

**இளேய்ந்த நா காரத்தின் ஏற்றம் உணரான்**
**உளேங்கித் தளர்தீங் குறும் !**

இள்-ளரகர மெய்யை, — ஏய்ந்த-ஈற்றிற் பொருந்திய, நாகாரத்தின் - நா என்னும் எழுத்தின் அருத்த மாகிய வாழ் நாள்களின் அருமையை, உணரான்-அறியாத வனுய் அந்த நாள்களே வீணே போக்கினவன், உள் மனத்தி னிடத்து, ஏங்கி ஏக்கத்தை யடைந்து, தளர் — உயிர் சோரும்படியான தீங்கு—பெருந்துக்கத்தை, உறும்—மரண காலத்தில் அடைவான்.

நன்மைகளேத் செய்யாமல் வாழ் நாட்களே விணே போக்கினவன், மரண காலத்தில் பெருந்துக்கத்தை அடைவான் என்பதாம். 219

## ளை

**இளேயா மனத்தினர்க்கே ஈடிலருள் தோன்றும்**
**தளேயாம் விளேயைத் தணந்து!**

இளேயா—சகுணத்தியானத்தில் தளர்ச்சியடையாத மனத்தினர்க்கே — மனத்திளே உடையவருக்கே, தளேயாம் -அவர்களேப் பிணித்துக் கொண்டிருந்த, விளேயை - கருமங்களே, தணந்து - நீக்கிக் கொண்டு, ஈடில் — சமான மில்லாத, அருள்—திருவருளானது, தோன்றும் — உதய மாகும்.

உருவத்தியானத்தில் சற்றும் சலிப்படையாதவருக்கே திருவருள் உதயமாகும் என்பதாம். 220

## ளொ

**உளொரு தொழும்பற் குலகனேத்தும் ஈவான்**
**இளமை கெடாமுதியோ னே!**

இளமை-இளமைப்பருவமானது. கெடா-எக்காலத்தும் கெடாத, முதியோன் — பழையோனுகிய இறைவனே, உள்-தன்னே இடைவிடாது தியானிக்கின்ற, ஒரு தொழும் பற்கு - ஒரு தொண்டனுக்கு, உலகுஅனேத்தும் சகல-உலகங் களேயும், ஈவான் - கொடுத்தருள்வான்.

பரமன் சகல உலகங்களேயும் தன்னே வழிபடுகிற, ஒரு மெய்த் தொண்டன் வேண்டினும் கொடுத்தருள்வான் என்பதாம். **221**

## ளோ

**உளோம் போதி யென்றொருவற் கோதிறைபண் போரார்**
**அளோம் யாமென் றேமாப் பவர் !**

அளோம் — கூர்மையாகிய பேரறிவுடையோம், யாம்-நாம். என்று - என்றுமதித்து, ஏமாப்பவர் —இறுமாப்படை பவர், ஒருவருக்கு - ஒப்பற்ற சுந்தரமூர்த்தி நாயனுருக்கு, உளோம் - யாம் ஆலயத்திலிருக்கின்றேம், போதி —நீ செல் வாய், என்று-என்பதாக ஓது- விடை கொடுத்தருளிய, இறை — பரமன், பண்பு-தனது மெய்யடியார்களேயும் வருத்தும் தன்மையை, ஓரார் நன்கு உணர்கின்றுரில்லே.

தம்மைப் பேரறிவுடையவராக மதித்து இறுமாப்பவர் பரமன் தனதுமெய்த் தொண்டர்களேயும் வருத்தப்படுத்தும் தன்மையை உணராதவராவார் என்பதாம். **222**

## ளள

**இளௌகாரந் தோறும் இயைந் தாங் கிருளும்**
**உளது யிர்கட் கெல்லாம் முள்ளும் !**

இள்—ளகரமானது, ஔகாரந்தோறும் - உயிரும், உயிர் மெய்யுமாகிய ஔகாரங்கள் தோறும், இயைந்தாங்கு— பொருந்தி இருத்தல் போல், இருளும் - ஆணவ மலமும், உயிர்கட்கெல்லாம் - சகல உயிர்களுக்கும், உள்ளும் —தத்தம் உள்ளத்தின் மறைபட்டு, உளது - பொருந்தியிருக்கிறது.

ளகரமானது ஔகாரங்கள் தோறும் இயைதல் போல ஆணவமலமும் உயிர்கள் தோறும் இயைந்து நிற்கும் என்ப தாம். **223**

## றகர வருக்கம்

### ற

அறமே யுயர்வென் றறிவார் அடைவார்
திறமாய தெய்வச் செயல் !

அறமே—தருமமே, உயர்வுஎன்று—மற்றைப் பொருளின் இன்பங்களைப் பார்க்கிலும் உயர்வுடையதென்று, அறிவார்- உறுதியாக உணர்ந்தவர்கள், திறமாய — தகுதியாகிய, தெய்வச் செயல்—தெய்வீகச் செயல்களை, அடைவார்— பெறுவார்கள்.

அறம், பொருள், இன்பங்களுக்குள் அறமே எல்லாப் பயன்களையும், தரவல்லதென்று உணர்ந்தவர்களே தெய் வீகச் செயல்களைப் பெறுவார்கள் என்பதாம். **224**

### று

அருமல மூன்றும் அறப்பெற் றவனே
பெருநல மெய்தப் பெறும் !

அரு—நீங்குதற்கரிய, மலம்மூன்றும் — ஆணவாதிமும் மலங்களும், அற—நீங்கும் பொருட்டு, பெற்றவனே— உண்மை ஞானத்தைப் பெற்ற ஒருவனே, பெரு—அடைதற் கரிய, நலம்—முத்தி இன்பத்தை, எய்தப் பெறும்—அடையப் பெறுவான்.

தத்துவ ஞானம் பெற்றவனே முத்தி இன்பம் பெறு வான் என்பதாம், **225**

### றி

இறிக்கைச் சிலையாக்கி எய்கின்றேன் காம
வெறிக்கஞ்சார்க் கெய்தரிது வீடு !

இறு—முறிக்கப்படும், இக்கை—கரும்பை, சிலையாக்கி — வில்லாகக் கொண்டு, எய்கின்றேன்—புட்ப பாணங்களைப் பெய்யும் மன்மதனாலுண்டாகும், காமவெறிக்கு—காமப் பயித்தியத்துக்கு, அஞ்சார்க்கு—பயப்படாதவருக்கு, வீடு— முத்தியானது, எய்தரிது—கிடைப்பது அருமையாகும்.

மன்மதனாலுண்டாகும் காமவெறிக்குப் பயப்படாத வர் மோட்சமடைவது அரிது என்பதாம். **226**

## றீ

**இறீதென் றிகழாமல் ஏற்றார் சிலர்வீட்(டு)**
**உறீஇய வாறும் உள !**

இல்—இல்லறத்தை, தீது என்று-குற்றமுடையதென்று, இகழாமல்—நிந்தியாது, ஏற்றார்—ஏற்றுக் கொண்டவருள் சிலர்—சில பெரியோர்கள், வீட்டு—மோட்சத்தின் கண், உறீஇயவாறும்—பொருந்திய வரலாறுகளும், உள—இவ் வுலகத்தில் இருக்கின்றன.

இல்லறம் பூண்டவர்களுக்குள் சில பெரியோர்கள் வீடு அடைந்த சரித்திரங்கள் இவ்வுலகத்துண்டு என்பதாம். **227**

## று

**உறுக்கும் நமவாதை யுள்ளத்திற் றோன்ற(து)**
**அறுக்குமெழுத் துண்டே யறி.**

உறுக்கும்—பயமுறுத்திக் கொண்டுவரும், நமவாதை— எமனாலுண்டாகும் மரணத்துன்பம், உள்ளத்தில்—சித்தத் தினிடத்து, தோன்றாது-அற்பமுமுண்டாகாமல், அறுக்கும்- கெடுக்கவல்ல, எழுத்து-மந்திரங்கள், உண்டு-இருக்கின்றன, அறி—அவற்றுள் ஒன்றை மானதமாய் உச்சரிப்பாயாக.

எமனாலுண்டாகும் மரணத்துன்பத்தைக் கெடுக்கவல்ல மந்திரங்களுள் ஒரு மந்திரத்தை நன்குணர்ந்து சொல் என்பதாம். ஏ — தேற்றம். **228**

## றூ

**உறூஉப் பரவுமவர்க் கோகைதரும் ஊர்நீர்**
**வெறூஉப் பழிக்கை விடு !**

உறூஉ—சென்று, பரவும் அவர்க்கு—வழிபடும் தொண்டர்களுக்கு, ஒகை—பேரின்பத்தை, தரும்—கொடுக்கவல்ல, ஊர்—தலங்களேயும், நீர்—தீர்த்தங்களேயும், வெறூஉ—வெறுத்து, பழிக்கை—நிந்திக்கும் மூடப் புத்தியை, விடு—விட்டுவிடுவாயாக.

வீட்டுக்கு ஏதுவாகிய மூர்த்தி, தலம், தீர்த்தங்களே வெறுக்கும் மூட புத்தியை விட்டுவிடு என்பதாம். **229**

## றெ

**இறெென்றற்காங் குன்றத் திறைவ னருளேப்**
**பெறெென்றுரைப்பார் பின்போய்ப் பிழை !**

தென்றற்கு—தென்றற் காற்றுக்கு, இல்லாம்—உறையுளாகியுள்ள, குன்றத்து—பொதியை மலேயின் கண் எழுந்தருளியிருக்கின்ற, இறைவன்—தவத்தலேவராகிய, அகத்திய முனிவரது, அருளே—கருணேயை, பெறு—பெற்றுக்கொள், என்று—என்பதாய், உரைப்பார்—போதிப்பவருக்கு, பின் போய்—பின்சென்று, பிழை-நீ பிழைத்துக் கொள்வாயாக.

அகத்திய முனிவரது அருளேயடைய விரும்புமவரை அடுத்து வழிபட்டுப் பிழைத்துக் கொள் என்பதாம். **230**

## றே

**இறேதந் தரல்போன் றியங்கிடையார் மோகத்(து)**
**உறேமென் றுரையார் உறுர்.**

இறு—முறிபடும், ஏதம்—துன்பத்தை, தரல்போன்று—உண்டாக்குவதை ஒத்து, இயங்கு—துவளுகின்ற, இடையார்—இடையை உடையை பெண்கள் பேரிலுண்டாகும், மோகத்து—மயக்கத்தில், உறேம்—ஒருகாலும் அகப்படோம்,

என்று—என்பதாய், உரையார்—தமது வாக்கினுற் சொல்ல மாட்டார்கள், உறுர்—அம்மயக்கம் சிறிதும் பொருந்தாத நின்மல சித்தத்தையுடைய பெரியோர்கள்.

அவாவை யொழித்த தவமுடைய பெரியோர்கள், பெண் மோகத்தில் ஈடுபட்டுச் சிறிதும் உழலோம் என்று ஆண்மை உரையார்கள் என்பதாம். **231**

## றை

**அறைப்பூடுஞ சிற்றறுகும் அன்னவா மாயா**
**மறைப்பால வாம்பல் மதம்!**

பல்மதம்—பலவித சமயங்கள், அறைப்பூடும்—அறைக் கீரையையும், சிற்றறுக்கும்—சிறிய அறுகம்புல்லேயும், அன்னவா—ஒப்பவைகளாகி, மாயா—கெடாத, மறைப்பால ஆம்—வேதங்களிடத்துள்ளவாம்!

அறைக்கீரையும், அறுகம்புல்லும் இடையூற்றுல் நசியாது பூமியில் விளங்குவது போலப் பல சமயங்கள் வேதங்களிடத்திற் சொல்லப்பட்டுள்ளன என்பதாம். **232**

## ஞெ

**உஞெகுத் தமணரைமுன் உய்த்தான்கைந் நீற்றுல்**
**அஞெலேத்தாட் கொள்வதரி தன்று !**

உல்-கழுமரங்களே, தொகுத்து—சேகரித்து, அமணரை-சமணர்களே, முன்—முற்காலத்தில் உய்த்தான்—அவற்றில் ஏற்றிய திருஞான சம்பந்த சுவாமிகள், கை—தமது திருக் கரத்தில் தாங்கிய, நீற்றுல்—விபூதியால், அல்—அச்சமணர்களுடைய அஞ்ஞானத்தை தொலேத்து—கெடுத்து, ஆட்கொள்வது—அடிமைகளாக்கிக் கொள்வது, அரிதன்று—அருமையன்றுகும்.

சமணர்களேக் கழுவேற்றிய திருஞானசம்பந்த சுவாமிகள் அங்ஙனம் செய்யாது அச்சமணர்களேத் தடுத்தாட் கொள்ளும் நிமித்தம் எண்ணிஞல் அஃது முடிவது அரிதன்று என்பதாம். **233**

## றே

உறேங்கார வட்டத்தின் உட்பயனோர் வாரை
வெறேமவர்க்கெந் நாவொருநல் வீடு!

உறு—ஆறு சமயங்களுக்கும் பொருத்தமாகிய, ஓங்கார வட்டத்தின்-பிரணவ எழுத்தின், உட்பயன்-உட்பொருளை, ஓர்வாரை—சந்தேகமும், மாறுபாடுமின்றித் தெளிந்தவர் களை, வெறேம்—யாம் வெறுக்கமாட்டோம், அவர்க்கு—அப்பெரியோர்களுக்கு, எம்—நம்முடைய, நா—நாவானது. ஒரு—ஒப்பற்ற, நல்வீடு—நன்மை பொருந்திய உறை யுளாகும்.

பிரணவம் என்னும் மந்திரத்தின் உண்மைப்பொருளை நன்கு உணர்ந்தவர்களை மனமொழி மெய்களால் யாம் வழி படுவோம் என்பதாம். **234**

## றௌ

அறௌவத் தடுத்தாள்வார் ஆரெனினும் தாழ்சீர்
கொறௌவைக் குணத்தோர் கொள்ளார்!

அல்—அஞ்ஞானமானது. தௌவ—கெடும்படி, தடுத்து-தீ நெறியினின்றும் விலக்கி, ஆள்வார்—நன்னெறியிற் செலுத்தி அடிமையாக்கிக் கொள்ளவல்லவர், ஆர் எனினும்—எவ்வகைக்கீழ்மை உடையவராயினும், தாழ் நீர்—அவரையே வணங்கி உய்யவேண்டும் என்னும் நற்குணத்தை, கொல்—உயிர்க்கொலையை விரும்பிய, தவ்வைக் குணத்தோர்—மூதேவிக்குண முடைய மூடர்கள், கொளார்-கொள்ள மாட்டார்கள்.

நமது மயக்கத்தை அழிக்கச் செய்பவர் யாவராயினும் அவரே எமது சற்குரு என்று கொள்ளும் நற்குணமானது கொலை புலைகளை விரும்பிய கொடியார்களுக்கு உண்டாகாது என்பதாம். **235**

## ணகர வருக்கம்

### ண

**அனக ஞெருவன் அகிலமுற்றும் உள்ளான்**
**எனவுரைக்கை மேலோர்க் கிசை !**

அனகன்—பரிசுத்தனுகிய, ஒருவன்—ஒரு கடவுளே, அகிலமுற்றும்—உலகமுழுதும், உள்ளான்—நிறைந்திருக்கிறுன், என—என்று, உரைக்கை சொல்லுவது மேலோர்க்கு—அறிவுடையோர்கட்கு, இசை—கீர்த்தியாகும்.

அநாதிமுத்தனுகிய ஒரு கடவுளே எங்கும் நிறைந்திருக்கின்றுன் என்று உரைப்பது பெரியோர்களுக்குச் சிறப்பாகும் என்பதாம். **236**

### ஞ

**அஞசந் தருமதியம் அன்ன மதியோர்**
**கஞவும் பொருளென்பார் காண் !**

அல்—இராத்திரி காலத்துள்ள இருளுக்கு, நாசம்—கேட்டை, தரும்—உண்டுபண்ணுகிற, மதியம்—பூரண சந்திரனே, அன்ன—ஒப்பாகிய, மதியோர்-குளிர்ந்த அறிவினே உடையவர், கஞவும்—சிலர் பொய்யென்று கூறும் சொப்பனத்தையும், பொருள் என்பார்—மெய்யென்று கொள்ளுவார். காண்—இதை நீ அறிவாயாக.

நல்ல அறிவினே உடையவர் சொப்பனத்தையும் பயன் உடையதெனக் கருதுவார் என்பதாம். **237**

### ணி

**அனிச்ச மலர்நேர் அடியுடையா ராசை**
**இனிப்பினும்சற் றீசனேநன் கெண் !**

அனிச்சமலர்—அனிச்சப்பூவினை, நேர்—ஒத்த, அடியுடையார்—பாதங்களை உடையமாதர்களால் உண்டாகும், ஆசை—இச்சையானது, இனிப்பினும்—மனதுக்கு இனிமை தருவதாயினும், ஈசனை—பரமனை, நன்கு—நன்ருக, சற்று—சற்றே, எண்—தியானிப்பாயாக.

பெண்ணாசையானது மனதை விழுங்கிக் கொண்டு ருசித்தாலும் இறைவனையும் சற்று நேரம் நன்ருகத் தியானித்துக் கொள் என்பதாம். **238**

## னீ

**அனீங்கத் துறந்தேற் றருந்தவமே செய்யும்**
**முனீந்திரரே பாரின் முதல் !**

அல்—அஞ்ஞானமானது, நீங்க—நீங்கும் பொருட்டு துறந்து—துறவறம் பூண்டு, ஏற்று—பிச்சை எடுத்துண்டு, அரும்—அரிய, தவமே—தவத்தினையே, செய்யும்—செய்கிற, முனீந்திரரே—பெரியோர்களே, பாரின்—உலகத்தில் முதல்—முதன்மை உடையவராவார்.

நல்லொழுக்கமுடைய தவசிகளே உலகத்தில் உயர்ந்தவர்கள் என்பதாம். **239**

## னு

**உனுங்கருத்தி னுள்ளும் உறைவான் அருட்சீர்**
**மினுங்கிற் றவிரும் வினை !**

உனும்—நினைக்கின்ற, கருத்தின் உள்ளும்—மனத்தின் அகத்தும், உறைவான்—வசிக்கும் செகதீசனது, அருட்சீர்—திருவருட் செல்வமானது மினுங்கில்—ஒருவனிடத்துச் சற்றே பிரகாசித்து விடுமாகில், வினை—சகலவினைகளும், தவிரும்—அவனை விட்டு நீங்கும்.

ஒரு தொண்டனிடம் இறைவனது கிருபை சற்றே வெளிப்படுமாகில் உடனே அவனுக்குச் சகல வினைகளும் நீங்கி விடும் என்பதாம். **240**

## னூ

**உனூல்எனூல் நன்றென் நுரைபயிற்றும் வாதம்**
**மனூகத்தோர் தம்பால் வரா !**

உன்—உன்னுல் அபிமானிக்கப்பட்ட, நூல்—நூலானது குற்றமுடையது, என்—என்னுல் அபிமானிக்கப் பட்ட நூல், நன்று—நன்மை உடையது, என்று—என்பதாய் உரைபயிற்றும்—தப்பு வார்த்தைகளைக் கற்பித்துப் பேசும், வாதம்—தருக்கமானது, மன்—நிலைபெற்ற, ஊகத்தார் தம்பால்—சமபுத்தியுடைய அறிஞர்களிடத்து, வரா—உண்டாகாது.

தீதேயாயினும் தாம்பிடித்த பிடிவிடாது பேசும் குற்ற வாளிகளின் குதர்க்கமானது, நிலை பெற்ற உண்மை அறிவுடையவர்களிடத்து இராது என்பதாம். **241**

## னெ

**இனென்பொறிமுன் மவ்விகரம் ஏய்ந்தன்ன வாழ்வில்**
**நனெஞ்சுழல மாய்தல் நவை !**

இன்—னகரமெய், என்—என்று, சொல்லப்படுகிற, பொறி—எழுத்தின், முன்—முகப்பில், ம இகரம்-மி என்னும் எழுத்தானது, ஏய்ந்தன்ன—பொருந்தியதனுலுண்டாகும் மின் என்னும் பதத்தின் அருத்தமாகிய மின்னலை ஒத்த, வாழ்வில்—பொய்வாழ்க்கையினிடத்து நன்—நன்மைக்கு ஏதுவாகிய, நெஞ்சு—மனதை, உழல—வாழ்நாள் முழுதும் அலைய விட்டு, மாய்தல்—வீணுக இறந்து போவது, நவை—மனிதப் பிறப்பை அடைந்தவருக்குக் குற்றமாகும்!

நிலையற்ற வாழ்வில் வாழ்நாளை வீணுகக் கழித்து விட்டு இறந்து போவது மனிதருக்குக் குற்றமாகும் என்பதாம். **242**

## னே

இனேயந் தொடர இடைந்தாலும் ஈசன்
தனேயங்கொள் வாரேற் றவர் !

இல்—இல்லறத்தின், நேயம்— ஆசையானது, தொடர-விடாமற் பற்ற, இடைந்தாலும் - தரித்திரம் முதலிய வற்ருல் வருத்த முற்ருலும், ஈசன்தன்—செகதீசனே நாடும், நேயம் - விருப்பத்தை, கொள்வாரேல் - ஒருவர் உடைய வராயின், தவர் - அவர் மெய்த்தவசிகளேயாம்.

பெருந்துயரத்தோடு இல்லறத்தில் வாழ்பவராயினும் தெய்வ அருளே விரும்புவாராயின், அவரும் மெய்த் தவசிகளாவார் என்பதாம். 243

## னை

இனேய இடர்நலம் என்றெண்ணுணர்ச்சி யுண்டேல்
கனேகடற்பார் காக்கை கடன்!

இடர் — துன்பமும், நலம் — சுகமும், இனேய — இத் தன்மையுடையன, என்று — என்பதாய், எண் — பகுத் தறிகின்ற, உணர்ச்சி — அறிவானது, உண்டேல் — ஒரு தவசிக்கு இருக்குமாயின், கனே — பேரொலியையுடைய கடல் — சமுத்திரஞ் சூழ்ந்த, பார் — பூமியை, காக்கை — காப்பது, கடன்—அவனுக்குக் கடமையாகும்.

நலம் இன்னது, இடர் இன்னது என்றுணரும் உணர்ச்சி, ஒருவனுக்கு இருக்குமாயின் அவன் உலகத்துக்குதவி செய்வது கடமையாகும் என்பதாம். 244

## ஞெ

உஞெரு மனமிறந்தால் உண்டுறங்கல் வேண்டிப்
பிஞெருமனம் உண்டாமோ பேசு !

உன் — எல்லாவற்றையும் கருதுகிற, ஒரு — ஒப்பற்ற, மனம் — மனமானது, இறந்தால் — முழுமையும் இறந்து விட்டால், பின்—மறுபடியும், உண்டு — ஆகாரத்தைப் புசித்து, உறங்கல் — நித்திரைசெய்தலே, வேண்டி-விரும்பி, ஒருமனம் — வேறு ஒருமனமானது, உண்டாமோ உண் டாகுமா, பேசு — நீ சொல்லுக.

மனம் இறந்து விட்டால் ஆகார நித்திரையை விரும்ப மற்ெருரு மனம் உற்பத்தியாகுமா? சொல் என்பதாம். **245**

## ஞே

**உஞேங்கல் தொறும்நடிக்கும் ஒள்வேலாற் போற்றும்**
**எஞேன்புகொன்றுண் ஞார்ப்புகழ் தலே !**

உன் — வளர்ச்சியையுடைய, ஓங்கல்தொறும்—மலேகள் தோறும், நடிக்கும்—நடனஞ் செய்யும், ஒள்—ஒளியுடைய, வேலான் — வேலாயுதத்தையுடைய முருகக் கடவுளே, போற்றும் — வழிபடுகின்ற, என் — எனது, நோன்பு — விரதமானது, கொன்று-உயிர்க்கொலே செய்து, உண்ணுர்- புலாலேப் புசியாதவர்களே, புகழ்தலே — கொண் டாடுதலேயாம்.

முருகக் கடவுளின் அடிமையாகிய என்னுடைய விரதம், கொலே புலேகளே நீக்கினவரைப் புகழ்ந்து கொண் டிருப்பதேயாகும் என்பதாம். **246**

## னௌ

**இனௌவற் கனியெறிந்தாற் கேற்றதமிழ்ப் பாடல்**
**பனௌவைவள்ளு வன்சொற் படி !**

இன் — இனிய, நௌவற்கனி — நாவற் பழத்தை, எறிந்தாற்கு — மரத்தினின்றும் பறித்தெறிந்த முருகக் கடளுக்கு, ஏற்ற — தகுந்த, தமிழ்ப்பாடல் — தமிழ்ப் பாடலே, பன் - பாடியருளிய, ஔவை — ஔவையார், வள்ளுவன் — திருவள்ளுவ நாயஞர் என்னும் இவ் இருவரு டைய சொல் — நூல்களே, படி — வாசித்தறிவாயாக.

ஔவையார், திருவள்ளுவ நாயனுர் என்னும் இருவருடைய, நூல்களைப் படித்து உண்மைப் பொருள்களைத் தெரிந்து கொள் என்பதாம். **247**

## முற்றிற்று

**எல்லா வருக்கமுஞ்சொல் என்குறட்பாக் கைத்திடினும்**
**நல்லார் விரும்புவதே ஞாயமென்னும் நானிலமே !**

எல்லா வருக்கமும் — உயிர் வருக்கம் முதலிய வருக்கங்கள் எல்லாவற்றிலும் உள்ள ஒவ்வொரு எழுத்தையும் சொல்—தனித்தனி பாக்களின் உதவும் முறையே அமைத்துச் சொல்லப் புகுந்த, என்-என்னுல் இயற்றப்பட்ட இந்நூலுள், குறட்பா — சில குறள் வெண்பாக்களை, கைத்திடினும் — சிலர் வெறுத்தாலும், நானிலம்—உலகமானது, நல்லார்-பொருட்சுவை தெரிந்த நல்லோர்கள், விரும்புவதே - மனம் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளுவதே, ஞாயம் — வழக்காகும், என்னும் — என்று முறையிடும்.

என்னுலியற்றப்பட்ட இந்நூலுள் சில பாக்களில் சில சொற்கள் சுவைகுன்றி இருப்பினும் நல்லோர்கள் பொருள் நயம் பற்றி மனமகிழ்ந்து ஏற்றுக் கொள்வார் என்பதே வழக்கமென்று இவ்வுலகம் சொல்லும். ஆதலால், இந்நூல் யாவராலும் புகழப்பெற்று விளங்கும் என்று துணிந்தேன் என்பதாம்.

**தெய்வமே துணை**



